குட்டிக்யூரா அழகி




குட்டிக்யூரா
டால்க்
இளம் பெண்கள் இதை
விரும்புவது இயற்கையே

CHAITRA-B-MP-2 TMR

# ஒளிப்பதிவுக்காகத் திரைப்படம் ஓடுமா?






ஒளிப்பதிவாளர் ஸ்ரீராம்.

'நாயகன்' படத்திற்காக மத்திய அரசு விருது பெற்ற இவரைப் புகழ்ந்தவர்கள் பலர். ஆனால் குறை கண்டு பேசியவர்களும் உண்டு.

அப்படிப் பேசப்பட்ட விஷயங்களையே அவர் முன்பு கேள்வியாகத் தொடுத்தேன். அவற்றுள் சில:

கே: பரிசு பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன் காமிராவைக் கையாளுகிறீர்களா?

ப: இந்தக் கேள்வியே நான் சிறந்த ஒளிப்பதிவாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர்தான் எழுகிறது. காமிராவைக் கையாளும் பொழுது, எனக்கு அப்படி ஆசையே எழுந்ததில்லை. கதை எழுதுபவர்களுக்கு ஒரு கருத்துக் கண்ணோட்டம் இருப்பது போல, எனக்குள் காமிராவை இப்படிப் பட்ட வெளிச்சத்தில் இப்படித்தான் கையாள வேண்டும் என்கிற கருத்து — கற்பனை இருக்கிறது. அவ்வளவுதான்.

கே: பெரும்பாலான ரசிகர்களுக்குப் பளிச் சென்று திரைப்படம் இருந்தால்தான் மகிழ்ச்சி. நீங்கள் புதுமையான லைட்டிங் முறைகளைக் கையாள்வதால், ரசிகர்களுக்கு அந்தத் திருப்தி ஏற்படுமா? சில சமயம் பின்னணிக்கு முக்கியத்துவம் அதிகரித்து நடிகர் முகமே தெரிவதில்லையே?

ப: காமிரா வழியாகவும் கதை சொல்லப்பட வேண்டும் என்கிற கருத்துள்ளவன் நான். செட்டில் காட்சியை விளக்கிச் சொன்னதும் காமிரா கோணங்களையும் அதற்கான வெளிச்சத்தையும் அரை மணி நேரத்தில் தீர்மானித்துச் செயல்படுவது என் வழக்கமல்ல. கதை பின்னப்படும் பொழுது கூடவே அமர்ந்து கதையின் போக்கை முதலில் தெரிந்து கொள்வேன். பிறகு இன்னின்ன காட்சிக்கு இப்படி ஒளிப்பதிவு செய்யலாம் என்பதை டைரக்டரிடம் பேசி, அவருடைய அனுமதி பெற்றுத் தீர்மானிப்பேன். செட்டுக்

குப் போகும் முன்பே ஒரு தீர்க்கமான 'ஹோம் ஓர்க்' செய்து கொண்டுதான் போவேன்... செட்டில் வெளிச்சம் போடு வதற்காக நேரத்தைச் செலவழிப்பதில்லை. ஒளிப்பதிவு சிறப்பாக இருக்கிறது என்று சொல்லப்படுமேயானால் அந்தப் பெருமை எனக்கு மட்டும் சேராது. இயக்குனருக்கும் என்னோடு ஒத்துழைத்த 'யூனிட்'டுக்கும் சேர்ந்துதான் அப்பெருமை. புதுமையான லைட்டிங் முறைகள் தேவை யில்லை எனச் சொல்ல மாட்டேன். வெளிச்சம் போட்டுக் காட்டுவது மட்டுமே காமிராவின் பணியல்ல. காமிராவும் லைட்டிங்கும் கையாளப்படும் விதத்தில் உணர்ச்சி பாவங்களை அழுத்தமாகப் பிரகாசிக்கச் செய்யவேண்டுமே தவிர காட்சியை அல்ல. காட்சிக்கு மட்டுமே முக்கியத்துவம் தர வேண்டிய இடங்களில் அதையும் செய்வேன்.

கே: சமீபத்தில் வெளிவந்த 'அக்னி நட்சத்திரம்' படத்தில் ஒரு பாடல் காட்சியிலும் உச்சக்கட்ட காட்சியிலும் பளிச்பளிச்சென்று வெளிச்சத்தை மின்ன வைத்திருப்பது எரிச்சமூட்டுகிறது என்பது ஒரு சிலருடைய கருத்தாகும். அதைப் பற்றித் தங்கள் கருத்து என்ன?

ப: அது தனிப்பட்ட சிலருடைய கருத்தாக இருக்கலாம். அது மற்றவர்களால் பேசப்படுகிறது என்பதே ஒரு பிளஸ் பாயிண்ட்தான். புதிய முயற்சி என்று கூடச் சொல்லலாம்.

கே: காமிராக் கண்களால் படமாக்குவதற்கு முன்பு அக்காட்சியைப் பற்றி எவ்வாறு கற்பனை செய்து பார்ப்பீர்கள்?

ப: நாம் பல பொருள்களை நேரில் பார்க்கிறோம். அதை நாம் நேரில் பார்க்கிற மாதிரியே படமாக்குவதில் என்ன சிறப்பு இருக்கிறது? அதே பொருளை அல்லது இடத்தைப் புதிய பார்வையில் படமாக்க வேண்டும் என்கிற வேகம் எனக்கு உண்டு. உதாரணத்திற்குச் சொல்லப் போனால், அக்னி நட்சத்திரம்' படத்தில்'ராஜா ராஜாதிராஜா' பாட்டை எழும்பூர் ரயில் நிலையத்தில் படமாக்குவது என முடிவு செய்தோம். நான் சின்ன வயதிலிருந்தே அந்த ரயில் நிலையத்தைப் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். அதே, சராசரி மக்கள் பார்க்கும் அதே பார்வையில் படமாக்காமல் எப்படியெல்லாம் புதுமையாகப் படமாக்கலாம் என்று இயக்குனர் மணிரத்னத்துடன் கலந்து யோசித்தேன். அக்காட்சியைப் படத்தில் பார்த்தவர்கள் பாராட்டினார்கள்.

கே: இதுவரை சிறந்த ஒளிப்பதிவுக்காக எந்தப் படமும் ஓடியதில்லை. சிறந்த இசைக்காக ஓடியிருக்கிறது...

ப: 'யூனிட்' ஓர்க்தான் எப்போதுமே வெற்றிக்குக் காரணம். நீங்கள் சொல்கிற மாதிரி இசைக்காக ஒரு படம் ஓடுகிறதென்றால் கூட, அதிலும் பாடகர், இசையமைப்பாளர், பாடல் காட்சி, அதில் நடிப்பவர், அதை டைரக்ட் செய்தவர் முதலிய பலரது ஒத்துழைப்பு தேவை. ஒலிப்பதிவாளர் சரியில்லையெனில் என்ன கதி? ஆகவே குழுவின் ஒத்துழைப்புதான் எந்த வெற்றிக்கும் அடிப்படை. ஒளிப்பதிவுக்காக மட்டுமே ஒரு படம் ஓடும் என்பதை நான் ஒப்புக்கொள்ளவில்லை.

பேட்டி: **திரைஞானி**

---

## அடுத்த இதழில்......



வி. பி. சிங் போட்டியும்
இ. காங்கிரஸ் பயமும்
— சிறப்புக் கட்டுரை

**ரீ — விசிட் முடிந்தது:**
**பிரச்னைகள் தொடர்கின்றன......**
— கவர் ஸ்டோரி



# பினாமி அவசரச் சட்டம் —ஒரு கண் துடைப்பு!

சொத்துக்கள் யாரோ ஒருவர் பெயரில் இருக்கும். ஆனால் அவர் சொத்தின் உரிமையாளராகக் கருதப்பட மாட்டார். சொத்தினை அனுபவிக்கும் உரிமையையும் பெற்றிருக்க மாட்டார். இவர் பினாமிதாரர் என்று சட்டத்தில் அழைக்கப்படுகிறார். சொத்தினை உண்மையில் அனுபவித்து வருபவர் தமது சொத்து இல்லை என்று சட்டப்படி தப்பித்துக் கொள்வார். இவ்வாறு பினாமிச் சொத்துக்கள் நமது நாட்டில் பல ஆயிரம் கோடி ரூபாய்களுக்கு உள்ளன.

உதாரணமாக, ஒரு தனி மனிதன் பன்னிரண்டரை ஏக்கருக்கு மேல் பாசன வசதி பொருந்திய விவசாய நிலம் வைத்துக் கொள்ளக் கூடாது. ஒரு குடும்பம் முப்பது ஏக்கருக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாது என்று நில உச்சவரம்புச் சட்டம் கூறுகிறது. ஆனால் பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலம் ஒரு சில குடும்பங்களிடம் இன்றும் உள்ளது. காரணம் பினாமி வசதிதான். இதேபோல் நகர்ப்புற உச்சவரம்பு, செல்வ வரி போன்ற பல சட்டங்களிலிருந்தும், வரிகளிலிருந்தும் தப்ப, பினாமி முறை உதவுகிறது.

பினாமிதாரர், மறைந்து நிற்கும் உண்மையான உரிமையாளரை ஏமாற்ற முயன்றால், சொத்துக்கள் பினாமிதாரர் பெயரில் இவர்களால் பெயரளவில் வாங்கப்பட்டது என்றும் பினாமிதார், சொத்தின் உண்மையான சொந்தக்காரர் அல்ல என்றும் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்துச் சொத்துக்களைப் பினாமிதாரரிடமிருந்து கைப்பற்றிக் கொள்வார்கள். இவ்வாறு நடப்பதை இந்தியாவில் இன்று நிலவி வரும் சட்டம் அனுமதித்து வருகிறது. ஆக, உச்சவரம்பு போன்ற பல சட்டங்களை ஏமாற்ற, பினாமிதாரர்களை உருவாக்கவும், பினாமிதாரர் ஏமாற்ற நினைத்தால் சட்டத்தைப் பிரயோகித்து அவரை வழிக்குக் கொணரவும் சட்டமே அனுமதிக்கிறது! சட்டத்தை ஏமாற்றச் சட்டமே துணை நிற்கிறது!

இந்த அவல நிலையைப் போக்கக் குடியரசுத் தலைவர் மே 19—ம் தேதி ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பித்துள்ளார். இதன்படி, சொத்து பினாமியாக மற்றொருவரிடம் இருந்தால், பினாமிதாரரிடமிருந்து சொத்தினைத் திரும்பக் கைப்பற்ற, சொத்தின் உண்மையான உரிமையாளர் எந்தவித நடவடிக்கையும் எடுக்க முடியாது; வழக்குத் தொடரவும் முடியாது. சொத்து தன்னுடையதென்று எந்த வழக்கிலும் வாதுரைக்க இயலாது.

இதனால் சட்டத்தை ஏமாற்றுவதும் பினாமிகளை ஏற்படுத்துவதும் குறைந்து விடுமா? சந்தேகமே. காரணம், இந்த அவசரச் சட்டம் பினாமிதாரரிடமிருந்து சொத்தினைச் சட்டப்படி கைப்பற்றும் உரிமையைத் தகர்த்தெறிந்து விட்டதேயொழிய பினாமியாக சொத்து வைத்திருப்பதைக் குற்றமாக்கவில்லை! சொத்தை பினாமிதார் பெயரில் வைத்துப் பலனை அனுபவித்து வருவதையும் குற்றமாக்கவில்லை. எனவே பினாமி சொத்துக்கள் மறையாது. பினாமிதாரர் வாலாட்டினால் நீதி மன்றத்துக்குப் போக முடியாத போது, பினாமிதாரரை



மிரட்டிப் பணிய வைப்பதுதான் நடக்கும். எனவே, பினாமிகள் உண்மையில் ஒழிக்கப்பட வேண்டுமானால் பினாமியாகச் சொத்துக்கள் எழுதி வைப்பதையும் பினாமியாகச் சொத்துக்கள் வைத்திருப்பதையும் அதற்கு உடந்தையாக இருப்பதையும் குற்றமாக்க வேண்டும். அதற்குத் தண்டனையும் விதிக்க வேண்டும். செய்யுமா, நமது அரசு?

வழக்கறிஞர் **எஸ். கிருஷ்ணசாமி**

கூறக் கேட்டு எழுதியவர்: **கௌசல்யா.**

---

**"எப்போதும் அந்த ஆளு தலைவருக்குப் பின்னாடி கைகட்டிக்கிட்டுப் போய்க்கிட்டிருப்பாரு. இப்ப அவரு பின்னாடி தலைவரு கைகட்டிக்கிட்டுப் போறாரே, ஏன்?"**

**"பினாமி ஒழிப்புச் சட்டம் வந்ததிலேருந்துதான் இப்படி மாறிட்டாரு."**

— சேத்தூர் அன்பழகன்.



அரசாங்கம் ஓ.கே. சொன்னால் இன்னும் ஆறேழு வாரங்களுக்குள் தேர்தலை நடத்திவிடும், தேர்தல் கமிஷன். இந்தச் சூழலில் ஜெயலலிதா அணியின் நிலை என்ன?

# ஜெனரல் ஜெயலலிதா!







° பால்கனி தரிசனம்.

நான் முதலமைச்சராக வந்தால்...

'— போலீஸ் இலாக்காவை ஒரு கை பார்ப்பேன்!

'— எம். ஜி. ஆரின் மரணத்தைப் பற்றி விசாரிக்கக் கமிஷன் போடுவேன்!

— எம். ஜி. ஆரைப் போன்றே கையெழுத்துப் போட்டு, கோடிக்கணக்கில் சம்பாதித்த ஜானகி — வீரப்பன் போன்றவர்களை விசாரணை நடத்தி 'உள்ளே' தள்ளுவேன்!

— சர்க்காரியா கமிஷன் அறிக்கைப்படி கருணாநிதி மீது வழக்குப் போட ஏற்பாடு செய்ய வேண்டும்!

இப்படியாக மேடைக்கு மேடை முழங்கி முழக்கம் செய்து கொண்டிருக்கிறார் ஜெயலலிதா. 'உங்களை விட்டால் முதலமைச்சராக்க எங்களுக்கு வேறு ஆள் கிடையாது' என்று மக்கள் இவரிடம் கெஞ்சுவது போல் நடந்து கொள்கிறார்.

தொடக்கத்தில் வீட்டிலேயே கட்சிப் பணிகளை ஆற்றிய போது, நாவலர், பண்ருட்டி போன்ற தலைவர்களை, வராந்தாவில் பல மணி நேரம் காக்க வைத்தவர்

ஜெயலலிதா. இதைக் கண்டு வெறுப்புற்ற நாவலர், 'உடனடியாக ஆபீஸ் திறக்க வேண்டும்' என்று வற்புறுத்திய பின், அவசர அவசரமாக ஒரு கட்டடத்தைப் பிடித்து அலுவலகத்தை ஆரம்பித்தார்கள். பண்ருட்டியைப் பொறுத்தவரை எப்போதுமே அவர் காங்கிரஸ் ஆள் என்று ஒரு பெயர் உண்டு. ''தேர்தலில் காங்கிரஸுடன் கூட்டணி வைத்தால், பெரும்பான்மையான இடங்களில் நாம்தான் போட்டியிட வேண்டும்' என்று நாவலர், சாத்தூர் ராமச்சந்திரன், திருநாவுக்கரசு போன்றோர் வற்புறுத்த பண்ருட்டி மட்டும் 'பாதிக்குப் பாதி' என்று பேசினார். 'யார் முதலமைச்சர் என்று பிரச்னை வரும் போது என்ன செய்வது' என்று கேட்டபோது அவரால் சரியான பதில் கூற முடியவில்லை.

ஜெயலலிதா சற்றுக் கடுமையாக இ. காங்கிரஸ் தலைமையுடன் பேசி 134 இடங்கள் தனக்கும், மீதி 100 இடங்கள் காங்கிரஸுக்கும் என்று பேசி முடித்தாராம். இன்னும் சரியாகப் பேசி முடிவாகவில்லை என்றும் இது மாறுவதற்கான வாய்ப்பு இருக்கிறது என்றும் காங்கிரஸ்காரர்கள் சொல்கிறார்கள்.

இதற்கிடையில் ஜெயலலிதா அணியில் தலைவர்களுக்கிடையே மனக்கசப்பு அதிகமாகிக் கொண்டே வருகிறது. எஸ். டி. எஸ். ஜெயலலிதாவைப் பிடிக்காமல், எம். ஜி. ஆர். இருக்கும்போதே கட்சியை விட்டுச் சென்றவர். ஆனால் அவர்தான் இப்போது போயஸ் தோட்டத்துப் பூசாரி! அவர் வார்த்தைதான் எடுபடுகிறதாம். இதைக் கண்டு மிக வருத்தப்படுபவர்கள், அந்த நாளில் இருந்தே ஜெயலலிதாவை ஆதரித்து வரும் திருநாவுக்கரசு, கே. கே. எஸ். எஸ். ஆர். போன்றோர்- எஸ். டி. எஸ். போதாதென்று ஜெயலலிதாவின் தோழியான சசிகலா என்பவரும், அவரது கணவரான நடராஜன் (இவர் தமிழக அரசுப் பணியில் உள்ளார்.) என்பவரும், ஜெ. அணிக்கான திட்டங்களை வகுத்துத் தருவதில் பெரும் பங்கு வகிக்கிறார்கள். எஸ். டி. எஸ். அ. இ. மு. க. வை விட்டுச் சென்று நமது கழகம், என்ற கட்சியை ஆரம்பித்தார் அல்லவா! அந்தக் கட்சியைச் சேர்ந்த பிரமுகர்களுக்குத்தான் மாவட்டங்களில் கட்சிப் பணிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இது போதாதென்று ஜெயலலிதாவின் தீவிர ஆதரவாளர் சேலம் கண்ணன் அவமானப்படுத்தப்பட்டு இருக்கிறார். சேலம் மாவட்டத்தை இரண்டாகப் பிரித்து மேட்டூர் முன்னாள் எம். எல். ஏ. நாச்சிமுத்துவைச் செயலாளராகப் போட்டதற்குக் கண்ணன் கடும் கண்டனம் தெரிவித்திருக்கிறார்.

கட்சிக்குள் நிலைமை இப்படியிருக்க, ஆங்காங்கே கூட்டங்கள் ஏற்பாடு செய்வதிலும் பிரச்னை. ஜெயலலிதா கூட்டங்கள், என்றால் ஏதோ மேடை போட்டோம், வந்து பேசினார், என்ற கணக்கில் முடிந்துவிடாது. லட்சக்கணக்கில் செலவு செய்து, வரவேற்பு வளைவுகள், சீரியல் லைட் அலங்காரம், மற்றும் லாரிகள் ஏற்பாடு செய்து ஆட்களைக் கூட்டிக் கொண்டு வருவது போன்ற வேலைகளைச் செய்ய வேண்டும். ஒன்றிரண்டு மாவட்டச் செயலாளர்களால் இது முடியும். எல்லோராலும் முடியுமா? சமீபத்தில் தூத்துக்குடியில் ஜெயலலிதா கூட்டத்துக்கு ஆட்களைக் கூட்டிக் கொண்டுவர ஏற்பாடு செய்யாததால் மைதானத்தின் பெரும் பகுதி காலியாக இருந்தது. ஜெ. வுக்குச் சொல்ல முடியாத கோபம்.

சமீபத்தில் நடந்த இரு நிகழ்ச்சிகள் ஜெ. அணியில் மனக்கசப்பு இருக்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. கோவைத் தம்பி வீட்டுக் கல்யாணமும் ஜெயலலிதா கதை எழுதும் திரைப்படமான 'தியாக தீப'த்தின் பூஜையும் ஒன்றாக நடந்தன. இந்த விழாவை நாவலர் புறக்கணித்தார். அப்புறம் ஜெயலலிதா அணியின் பிரசார நாடகமான 'சத்தியம் நீயே தர்மத் தாயே' அரங்கேற்ற நிகழ்ச்சியை, நாவலர், பண்ருட்டி, கே. கே. எஸ். எஸ். ஆர். ஆகிய மூவருமே புறக்கணித்தனர்.

இந்தச் சூழலில்தான் ஜெயலலிதா காங்கிரஸை மிரட்டிப் பெரும்பான்மை ஸீட்டுகள் வாங்குவதற்கு முயற்சி செய்கிறார். தப்பித்தவறி அவர் பதவிக்கு வந்துவிட்டால், தமிழகத்தில் கிட்டத்தட்ட ஒரு சர்வாதிகார ஆட்சிதான் நடக்கும் என்று கருதத் தமது சொற்களாலும், செயல்களாலும் இடமளித்து வருகிறார்!

— லம்பாஜி

புகைப்படங்கள்: சுபா



மகன்: அப்பா, நீ தேர்தல்ல தோத்துப் போயிட்டா வருத்தப்படுவியா?

தந்தை: மாட்டேன். அடுத்த தேர்தல்ல ஜெயிச்சுடலாம்னு நம்பிக்கையோட இருப்பேன்... ஏன் கேக்கறே...?

மகன்: இன்னைக்கு எனக்குப் பரீட்சை ரிசல்ட் வருது!

— சேத்தூர் அன்பழகன்.

# ஜனாதிபதி ஆட்சியே நீடிக்கலாமா..?

## —ஆளுனர் பேட்டி



கேள்வி: கிண்டி தேசிய பூங்காவின் மத்தியில் உள்ளது சென்னை ராஜ்பவன். ஒரு வனவிலங்கு சரணாலயத்தின் மத்தியில் வாழ்வது ஓர் அரிய அனுபவம். உங்களுக்கு வனவிலங்கியலில் ஆர்வமோ ஈடுபாடோ உண்டா?

பதில்: வனவிலங்கியலில் எனக்குச் சிறப்பான ஈடுபாடு ஏதும் இருப்பதாகச் சொல்ல முடியாது. தோட்டங்களில் எனக்கு ஆர்வம் உண்டு. ஆனால் என் மனைவிதான் அதன் பராமரிப்பில் ஈடுபாடு கொண்டுள்ளவள். டில்லியில் சஃப்தர்ஜங் ரோடில் இருந்த போதும் பிறகு லண்டனில் இருந்த போதும் எங்கள் வீட்டில் அழகான தோட்டம் இருந்தது. இப்போது இங்கே ராஜ்பவனிலும் அத்தகைய தோட்டத்தை உருவாக்கும் திட்டம் எங்களுக்கு இருக்கிறது...

கேள்வி: உங்கள் குழந்தைகளுக்குவன விலங்குகள் பால் ஆசை உண்டா.....?

பதில்: இல்லை. என் நான்கு குழந்தைகளுள் என் மகள் மட்டுமே சென்னையில் இருக்கிறாள். மற்றவர்கள் வெளிநாட்டில் இருக்கிறார்கள்.

கேள்வி: உங்கள் மகளின் பெயர் சமீபத்தில் செய்திகளில் அடிபட்டதல்லவா — போக்குவரத்து விதியை மீறியதற்காக அபராதம் செலுத்தினார் என்பதால்....?

பதில்: ஆமாம் அதைப் பற்றிப் பேசினாலே அவள் மிகவும் கூச்சப்படுகிறாள். ஒரு கூட்டத்தில் வைஜயந்திமாலா, பேசிய போது போக்குவரத்து விதிகளை மீறுபவர்களைப் பிடிப்பதில் கெடுபிடி அதிகமாக உள்ளது; மக்களுக்கு இந்தப் புதிய உத்வேகத்துக்குப் பழகிக் கொள்ள அவகாசம் தர வேண்டும் என்றார். அதனால்தான் நான் என் மகள் சம்பந்தப்பட்ட அந்தச் சம்பவத்தை எடுத்துக்காட்டாகக் கூறும்படி நேர்ந்தது.

கேள்வி: உங்கள் பணிக்காலத்தில் மிகுந்த மன்நிறைவைத் தந்த காலகட்டம் எது என்று கூற முடியுமா.....?

பதில்: அறுதியிட்டுச் சொல்வது சிறிது கடினம்தான் என்றாலும் திருமதி காந்தியின் கீழ் பணியாற்றிய நான்கு வருடங்களும் பிறகு சமீபத்தில் ராஜீவின் பிரதமச் செயலராக இருந்த சில மாதங்களையும் குறிப்பிடலாம். இந்தக் கால கட்டத்தில் முக்கியமான உயர் மட்ட முடிவுகள் எடுப்பதில் தொடர்புபட்டிருந்தேன் என்பதோடு திருமதி காந்தியின் நம்பிக்கைக்குரியவனாய் இருந்தேன் என்பது மிகவும் திருப்திகரமான விஷயம். இந்தக் கால கட்டம் திருமதி காந்திக்கும் சரி, நமது நாட்டுக்கும் சரி, பல பிரச்னைகளைச் சந்தித்துச் சவால்களை ஏற்க வேண்டிய தருணமாக இருந்தது... லண்டனில் இந்திய ஹைகமிஷனராக இருந்த பணிக்காலமும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. இன்னும் சொல்லப் போனால்.... நான் முதன் முதலில் துணைக் கலெக்டராக இருந்ததைக் கூட மகிழ்ச்சியான காலமென்றுதான் கூறுவேன். என்னுடைய அணுகுமுறை அத்தகையது. எந்தப் பணியை எடுத்துக் கொண்டாலும் அதை முழு மனத்தோடு அனுபவித் திருப்திகரமாகச் செய்ய வேண்டும் என்பதே என் கருத்து.

கேள்வி: திருமதி காந்தியின் எந்த குணாதிசயம் உங்கள் நினைவில் நிற்கிறது?



பதில்: அவரை ஒரு எஃகுப் பெண்மணியாகவே பத்திரிகைகள் சித்திரித்துள்ளன. நிர்வாகப் பொறுப்புகளையும் முடிவுகளையும் பொறுத்தமட்டில் இந்த வர்ணனை சரியானதே — ஆனால் அவருடைய வலிமைக்கும் வன்மைக்கும் ஊடே பெண்மைக்கே உரிய பரிவும் கனிவும் நிறைய இருந்தன. எவ்வளவு வேலைகள் இருந்தாலும், குழந்தைகள் நலன் அல்லது ஊனமுற்றோர் பிரச்னைகள், தொழு நோயாளிகள் நலன், வனவிலங்குப் பாதுகாப்பு போன்றவற்றுக்கு எப்படியோ அவர் நேரம் ஒதுக்கி விடுவார். இந்த விஷயங்கள் தொடர்பாக அவரை யாரேனும் சந்திக்க வந்தால் சில நிமிடங்களேனும் கண்டிப்பாக ஒதுக்குவார்.

கேள்வி: ஜனாதிபதி ஆட்சியின் கீழ் உள்ள தமிழகத்துக்கு ஆளுனராக உங்களை நியமித்த போது உங்கள் மனநிலை எப்படியிருந்தது?

பதில்: அதைப் பெருமையாகவும் கௌரவமாகவும் கருதினேன்.

கேள்வி: கடினமான வேலையாக இதைக் கருதவில்லையா.....?

பதில்: கடினமான வேலை என்பது தெரியும். தமிழகத்தில் ஓர் அசாதாரண சூழல் நிலவுகிறது. ஆனால் நான் மற்ற எல்லாப் பணிகளையும் அணுகியதைப் போல் முழு மனத்தோடும் எனது மிகச் சிறந்த முயற்சிகளைப் பிரயோகிக்க வேண்டும் என்ற உறுதியோடும்தான் இந்தப் பணியையும் அணுகியுள்ளேன். யார் என்ன கூறினாலும் விமர்சித்தாலும் அவற்றைக் கேட்டுக் கொள்வேன். ஆனால் யோசித்து எனக்குச் சரி என்று படுவதைத்தான் நான் செய்து வந்திருக்கிறேன். என்னுடைய கடமையுணர்வைத் தவிர வேறு எதற்கும் நான் கட்டுப்படுவதில்லை. அந்த உணர்வின் உந்துதலின் பேரில்தான் இங்கும் செயல்பட்டு வந்திருக்கிறேன்.

கேள்வி: நீங்கள் பொறுப்பேற்ற போது தமிழ்நாட்டு நிர்வாகம் திருப்திகரமானதாக இருக்கவில்லை என்பது அங்கீகரிக்கப்பட்டதே. இனி உங்களைத் தொடர்ந்து இந்த மாநிலத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்கப் போகும் மக்கள் பிரதிநிதிக்கு உங்கள் அறிவுரை என்ன.....?

பதில்: தமிழ்நாட்டின் அரசாங்க அதிகாரிகள் மிகச் சிறந்த லட்சிய பாரம்பரியத்தில் பயின்று வந்தவர்கள். ஆனால் சமீப காலமாக அந்தச் சிறப்புக்களை மறந்து அவர்கள் விட்டுக் கொடுக்கவும் (காம்ப்ரமைஸ்) மரபுகளை மீறவும் தொடங்கி விட்டார்கள். அவர்களைத் தூண்டி விட்டு மீண்டும் பழைய திடமான லட்சிய நோக்குடனும் ஆக்கத் திறனுடனும் செயல்படச் செய்வதே எனது முதல் பணியாக இருந்தது. பாரபட்சமின்றி, மனசாட்சிக்கு விரோதமின்றி, கட்சிச் சார்போ, கட்சியின் ஓர் அணி சார்போ இன்றி அவர்கள் செயல்பட வேண்டும்; தங்கள் கருத்துக்களை அவர்கள் அஞ்சாமல், வெளிப்படையாகக் கூற வேண்டும். இப்படி நடந்து கொள்வதற்கான துணிவையும் மனவலிமையையும் இப்போது தமிழ்நாட்டு அதிகாரிகள் பெற்றுள்ளார்கள். இந்த மூன்று மாத காலத்தில் நான் என்ன சாதித்திருக்கிறேன் என்று நீங்கள் கேட்டால் இந்த மாற்றத்தைத்தான் முதலில் குறிப்பிடுவேன். எனக்குப் பின்னால் ஆட்சிப் பொறுப்பை ஏற்பவர் இந்த ஆரோக்கியமான நிலையைத் தொடரச் செய்ய வேண்டும் என்பதே என்

விருப்பம்.

கே: நீங்களே ஓர் அதிகாரியாக இருப்பதால் உங்களால் இந்த நிலைமையைப் புரிந்து கொண்டு தக்க விதத்தில் செயல்பட முடிந்தது என்று கூறலாமா ...?

ப: ஆமாம். நான் இங்கு வந்து சேர்ந்த கணத்திலேயே என்னால் இதை உணர முடிந்தது. உடனே அதிகாரிகளுடன் பல கூட்டங்களும் கலந்துரையாடல்களும் நடத்தினேன். ஓர் அரசியல் தலைவரோ அல்லது கல்வியாளரோ இந்தப் பதவியை ஏற்றிருந்தால் என்னளவுக்கு இந்த நிலைமையை உணரும் சக்தி அவருக்கு இல்லாமல் போயிருக்கலாம். ஆனால் என்னால் முடிந்தது: அதிகாரிகள் கௌரவமாகவும் கண்ணியமாகவும் செயலாற்ற ஊக்கம் அளிக்க முடிந்தது.

கேள்வி: எப்படி ஊக்கம் அளித்தீர்கள்?

பதில்: அவர்கள் எடுக்கும் முடிவுகளுக்கு நான் பொறுப்பு ஏற்றுக் கொள்வதாக உறுதியளித்தேன். அந்த முடிவுகள் அவர்கள் மனச்



சாட்சிக்கு விரோதமில்லாமல் அவர்கள் சிந்தித்து எடுத்த முடிவுகளாக இருக்க வேண்டும் — யாரையோ திருப்திப்படுத்த எடுக்கப்பட்ட முடிவுகளாக இருக்கக் கூடாது என்பது மட்டுமே நான் விதித்த நிபந்தனை. சில அதிகாரிகள் என்னிடம் வந்து 'இப்படிச் செய்வதுதான் சரி என்று நாங்கள் எண்ணுகிறோம். ஆனால் இதைச் செய்தால் இன்னின்னாரிடமிருந்து எதிர்ப்புத் தோன்றும்' என்று வெளிப்படையாகவே சொல்லியிருக்கிறார்கள். அந்த முடிவுகளை எடுத்துச் செயல்படுத்த அவர்களுக்குத் தைரியம் அளித்துத் தார்மீகப் பொறுப்பை நான் ஏற்றுள்ளேன். சமீப காலத்தில் முடிவெடுப்பதில் அரசு நிர்வாகத்தில் ஏதேனும் சுறுசுறுப்பு காணப்படுகிறது என்றால், அதற்குக் காரணம் இதுதான். அதிகாரிகளால் குற்றச்சாட்டுக்களையும் விமர்சனங்களையும் தாங்கிக் கொள்ள முடியாமல் இருக்கலாம், ஆனால் அவை என்னைப் பாதிப்பதில்லை. அதனால் தார்மீகப் பொறுப்பை நான் ஏற்கிறேன்.

கேள்வி: உங்கள் இயல்பான சுபாவத்தோடு நீங்கள் அரசியல்வாதி அல்ல என்பதும் உங்களுக்குச் சாதகமாக இருந்திருக்கிறது. ஆனால், நாளை ஓர் அரசியல் கட்சித் தலைவர்தான் நிர்வாகி ஆகப் போகிறார். அப்போது மீண்டும் நிலைமை சீரழியாதா?

பதில்: சீரழியக் கூடாது என்று பிரார்த்திப்பதைத் தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்? எனக்கு இந்தப் பொறுப்பு அளிக்கப்பட்டதும், நான், 'இது தற்காலிகமானது தானே, எப்படியும் எனக்குப் பிறகு மக்கள் பிரதிநிதிதான் ஆட்சியை நடத்தப் போகிறார். நான் சில முடிவுகளை எடுத்தால் சிலர் மனம் புண்படும். அதனால் எந்த முக்கியமான முடிவும் எடுக்காமல் இப்படியே காலத்தை ஓட்டிவிட்டால், எந்த வம்பும் இருக்காது, விமர்சனமும் இருக்காது' என்ற நோக்கத்தில் இந்தக் குறுகிய காலத்தை ஓட்டியிருக்கலாம். ஆனால் நான் எனக்கு எது சரி என்று தோன்றியதோ அதைச் செய்தேன் — கால தாமதமின்றி உடனடியாகச் செய்தேன். இதைச் செய்தால் நமக்குப் பிறகு நிர்வாகத்தை ஏற்கும் மக்கள் பிரதிநிதிக்கு உபயோகமாக இருக்கும் — ஒரு நல்ல ஆரம்பமாக இது திகழும் என்ற நம்பிக்கையுடன் செயலாற்றி வருகிறேன். நிர்வாகத்தில் இந்த நோக்கும் துணிவும் முக்கியம். என் முடிவுகளை வேண்டுமானால் விமர்சிக்கலாம்; ஆனால் என் நேர்மையை யாரும் சந்தேகிக்க முடியாது.

கேள்வி: காலதாமதமின்றி முடிவுகளை உடனடியாக எடுக்கும் நோக்கில்தான் திடீரென்று வரிச் சலுகைகளை அறிவித்தீர்களா...? சலுகைகள் தொழில் வட்டாரங்களில் வரவேற்கப்பட்டாலும் நாடாளுமன்றத்தில் அவை கடுமையாக விமர்சிக்கப்பட்டுள்ளன; தேர்தல் நெருங்கும் நேரத்தில் அவை அறிவிக்கப்பட்டது சரியல்ல என்கிறார்கள், தேர்தல் கமிஷன்கூட, தேர்தலுக்குச் சற்றே முன்னதாக வரிச் சலுகைகளை அறிவிக்கக் கூடாது என்று திரும்பத் திரும்பக் கூறியுள்ளது......

பதில்: ஓர் அரசியல் கட்சி ஆட்சியில் இருந்து அதன் தலைவர் சலுகைகளை அறிவித்தால் இந்த விமர்சனம் பொருந்தும். ஆனால் நான் ஜனாதிபதியின் பிரதிநிதியாகத்தான் இங்கு இருக்கிறேன். மேலும் இந்தச் சலுகைகள் மாநிலத்தின் தொழில் வளர்ச்சியைக் கருதி, பாரபட்சமின்றி, எல்லோருக்கும் பலனளிக்க வேண்டும் என்ற நோக்கில் அறிவிக்கப்பட்டவை. வேலை வாய்ப்புப் பெருக்கத்திற்கும் இவை உதவும்; பொருளாதாரம் மேம்படும் என்ற நோக்கில் செய்யப்பட்டவை. இச்சலுகைகளை வரவேற்று, வாழ்த்தி ஏராளமான கடிதங்கள் எனக்கு வருகின்றன.

# "சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்"

நீங்கள் ராசிபலனை நம்புகிறவர்களானால் மிதுன ராசிக் குழந்தையைப்பற்றிய சுவையான தகவல்களைத் தெரிந்து கொள்ளுங்கள். இந்த ராசிக் குழந்தை குதூகலமாகவும், சுறுசுறுப்பாகவும் இயங்குவதைக் காணலாம். புதிய இடங்களைக் காண்பதில் அதிக ஆர்வம் கொண்டது. எல்லாவற்றையும் தெரிந்து கொள்ள ஆர்வம் காட்டும் மிதுனக்குழந்தைக்காகவே, உங்கள் பொது அறிவை வளர்த்துக் கொள்ளவும்.




அதிக உணர்ச்சி வசப்படும் இந்தக் குழந்தை, தன் குடும்பத்தாரிடத்தில் பற்றுகொண்டது.

ராசிபலனை நம்பினாலும், நம்பாவிட்டாலும், குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் கண்மணிக்குப் ''பாலடங்கிய ஃபாரெக்ஸை'' ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம், தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.









**சுவையுடன் வளரும் வழி**

GX/48/213 TML



தெய்வீக துளசியை நாம் வணங்கும் பொழுது அது நம்மை ஆசிர்வதிக்கின்றது

எப்படி?

மரம், செடிகளுக்கும், உயிர்த்தத்துவம் உண்டு என்று ஜகதீச சந்திர போஸ் என்னும் உலகப் பிரசித்தி பெற்ற இந்திய விஞ்ஞானி பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே கண்டு பிடித்துள்ளார்.

தாவரங்களுக்கும், பசி இருக்கின்றது தாகம் இருக்கின்றது பாராட்டி பேசினால் மகிழ்ச்சியடைகிறது.

திட்டினால் விசனமடைகிறது என்பதை கண்டுப் பிடித்தார். -தர்மச்சக்கரம்.

செடிகளில் தெய்வீக செடிகளை வளர்ப்பதை போலவே நல்லோர்களுக்கும் கிராண்ட் ஸ்வீட் வாங்கி கொடுங்கள்.

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2-வது மெயின் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை-600 020. போன்: 412557

கேள்வி: அதை மறுக்கவில்லை. ஆனால் நீங்கள் மத்தியில் ஆளும் காங்கிரஸ் அரசின் பிரதிநிதி என்ற நோக்கில் இதை அணுகு பவர்களுக்கு உங்கள் பதில் என்ன.....?

பதில்: அவர்களுக்கு என் பதில் இது தான். இச் சலுகைகள் யாவும் தமிழ்நாட் டின் முன்னேற்றத்தை மட்டுமே கருதி அறிவிக்கப்பட்டுள்ளன. இன்னும் ஆறு மாதங்களில் இல்லாவிட்டாலும் ஒன்பது மாதங்களில் நிச்சயமாக இவற்றினால் நல்ல பலன்கள் விளையும் என்பதில் எனக் குச் சந்தேகமில்லை. நான் தொழில் நிர் வாகத்துக்குப் புதியவனல்ல. இத்துறையில் எனக்கு அனுபவம் உண்டு; மேலும் கடந்த இரண்டரை மாதங்களாக அதிகாரிகளுடன் டஜன் கணக்கில் மீட்டிங்குகள் நடத்தி, விவரங்கள் பெற்று பல முக்கிய அதிகாரி களைக் கலந்தாலோசித்தே இந்த முடிவு களை எடுத்தேன்.

கேள்வி: இந்த முடிவு கட்சி அரசியல் கலப்பற்றது; உங்கள் சுயேச்சையான முடிவு எனக் கொள்ளலாமா....?

பதில்: அதில் சந்தேகமே வேண்டாம். இந்த முடிவுகளை இப்போதே எடுத்து, சலுகைகளை இப்போதே அறிவிக்க வேண் டும்; அதுதான் இந்த மாநிலத்துக்கு நல்லது என்ற எனது தீர்மானமான நம்பிக்கையின் தூண்டுதலால் மட்டுமே நான் இந்த வரிச் சலுகைகளை அறிவித்தேன்.

கேள்வி: அதனால்தான் விடுமுறை தின மான ஞாயிற்றுக்கிழமை அன்றே சலுகை கள் அறிவிக்கப்பட்டனவா?

பதில்: வேலை நாட்களில் எனக்குத் தொடர்ந்து இரண்டு மணி நேரம் அவகாசம் கிடைப்பது கடினம் என்பதால் ஞாயிற்றுக் கிழமையைத் தேர்ந்தெடுத்தேன்.

கேள்வி: கவர்னர் ஆட்சியே நீடித்தால் நன்றாக இருக்கும். தேர்தலே வர வேண் டாம் என்று சிலர் அபிப்பிராயம் கூறு கின்றனரே....?

பதில்: எனக்கும் இதைப் போன்ற சில கடிதங்கள் வருகின்றன. இப்படிக் கூறுபவர் கள் அவசரப்படுகிறார்கள் என்றுதான் நான் சொல்வேன். இவ்வளவு குறுகிய காலத்தில் இவ்வளவு தீர்மானமான ஒரு முடிவுக்கு வரக்கூடாது. மேலும் ஜனநாயக மரபுகளிலிருந்து நாம் விலகக் கூடாது என்றே நான் உறுதியாகக் கருதுகிறேன்.

கேள்வி: வேறு சிலர், நீங்கள் காங்கிரஸ் கட்சியின் 'இமேஜை' வளர்க்கத்தான் நிர் வாகத்தைத் துரிதப்படுத்துவதிலும் சீர்ப் படுத்துவதிலும் ஈடுபட்டுள்ளீர்கள் என்று கூறுகிறார்களே...?

பதில்: என் பணிகளையும் என் நோக்கங் களையும் பற்றிய நியாயமற்ற கணிப்பு இது என்றுதான் நான் சொல்ல முடியும். எனது நோக்கங்களைப் பொது மக்கள்



புரிந்து கொண்டு, எனது நடவடிக்கைகளை வரவேற்கிறார்கள் என்று செய்தித் தாள்கள் மூலமும் எனக்கு வரும் கடிதங்கள் மூலமும் அறிகிறேன். அதுவே எனக்குத் திருப்தியைத் தருகிறது. நான் சில உள்நோக்கங்களுடன் செயல்படுகிறேன் என்று குற்றம் கூறுபவர் கள் கூட, எனது முடிவுகள் சரியானவை என்று ஒப்புக் கொள்ளத்தான் செய்கிறார் கள். எனது நோக்கம் தமிழகத்தின் நலனும் முன்னேற்றமும் அன்றி வேறில்லை. இதுவரை நான் செய்துள்ளவற்றைச் செய்தி ராவிட்டால் எனக்கு நானே உண்மையான வனாக இருந்திருக்க முடியாது.

கேள்வி: மறைமலைநகரில் நடந்த அனைத்திந்திய காங்கிரஸ் மாநாட்டினை யொட்டி அதிகார துஷ்பிரயோகங்கள் நடந்திருப்பதாகவும் அரசாங்க யந்திரம் முழுமையாகப் பயன்படுத்தப்பட்டிருப்ப தாகவும் கூறப்படும் குற்றச்சாட்டுக் குறித்து.....

பதில்: அரசாங்க யந்திரம் பயன்படுத்தப் பட்டது — எதற்கு...? பிரதமருக்குப் பாது காப்பு அளிப்பதற்கு — இது மிகவும் முக்கி யம். அது மட்டுமில்லாமல், பல முக்கிய பிரமுகர்கள் இந்தியா முழுவதிலுமிருந்து வந்திருந்தார்கள். இவர்களுக்கு அடிப்ப டைத் தேவைகளை வழங்க வேண்டுமல் லவா....? அடிப்படை வசதிகளே இல்லாத ஓர் இடத்தில் மாநாட்டை நடத்த முடிவு செய்தார்கள். அதனால் அவற்றை அரசாங் கம் செய்துதர வேண்டியதாயிற்று. வழங்கப் பட்ட எல்லா வசதிகளுக்கும் அவர்கள் கட்டணமோ வாடகையோ செலுத்தியிருக்

கிறார்கள். கடுமையான விமர்சனம் எழும் என்பதற்காக நானோ எனது அதிகாரிகளோ அந்த வசதிகளை வழங்க ஏற்பாடு செய்யாமல் இருந்திருந்தால் அங்கு விளைந்திருக்கக் கூடிய குழப்பத்துக்கும் கேடுகளுக்கும் நாங்கள்தான் பொறுப்பேற்றிருக்க வேண்டியிருந்திருக்கும். அப்போது இந்த நிர்வாகத்தின் மதிப்பும் மரியாதையும் என்னவாகியிருக்கும்....? கும்பகோணத்தில் ஒரு மகாமகம் நடந்தால் பல சௌகரியங்களை அரசு மக்களுக்குச் செய்து தருவதில்லையா...? எனது ஒவ்வொரு நடவடிக்கையையும் விமர்சிப்பார்களே என்று நான் பயந்து கொண்டேயிருந்தால் எதுவுமே செய்யாமல் என் பாட்டுக்கு இந்த அழகான ராஜ்பவனில் அமைதியாக வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கலாம். அப்படி இராமல் நான் என் கடமைகளைத்தான் செய்து வருகிறேன்.

கேள்வி: சில விஷயங்களில் அதிகார துஷ்பிரயோகம் அத்து மீறி நடந்திருக்கிறதே.... ஒரு புதிய ரயில் நிலையம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது — பிறகு அது பயன்படாது என்று பிளாட்ஃபாரம் இடிக்கப்படுகிறது....?

பதில்: அதெல்லாம் ரயில்வே அமைச்சகத்தின் அதிகாரத்துக்குட்பட்ட விஷயம். அதைப் பற்றி எதுவும் கூற எனக்குத் தகுதி கிடையாது.

கேள்வி: சராசரி மக்களின் அன்றாட வாழ்க்கை பாதிக்கப்பட்டு அவர்கள் பல அசௌகரியங்களுக்கு உள்ளானார்கள் என்பதை மறுக்க முடியாதே....?

பதில்: எந்தக் கட்சியின் எந்தக் கூட்டம் எங்கு நடந்தாலும் அதன் தன்மைக்கு ஏற்ப சில அசௌகரியங்கள் மக்களுக்கு ஏற்படத்தான் செய்யும். அதற்காக அரசியல் மாநாடுகள், ஊர்வலங்கள், கூட்டங்கள் எதுவுமே கூடாது என்று ஜனநாயகத்தில் கூறி விட முடியுமா? இதைப் போன்ற வி.வி.ஐ.பிகள் பங்கேற்கும் கூட்டங்கள் நடந்தால் மக்களுக்கு அசௌகரியங்கள் நேர்வதைத் தவிர்க்க முடியாது. ஆனால் மறைமலை நகரில் மாநாடு நடந்ததால் அப்பகுதியில் நல்ல சாலைகள், குடிநீர் வசதி போன்ற சில நிரந்தர சௌகரியங்களும் ஏற்பட்டுள்ளன. அரசியல் கூட்டங்கள், ஊர்வலங்கள் போன்றவற்றால் மக்களுக்கு ஏற்படும் அசௌகரியங்களைக் குறைந்தபட்சமாக்க நான் முயன்று வருகிறேன்.

கேள்வி: மனுக்களுடன் உங்களை அணுகுபவர்களுக்கு என்ன உதவி செய்கிறீர்கள்?

பதில்: தினமும் நூற்றுக்கணக்கான மனுக்கள் வருகின்றன. மாவட்டங்களுக்குப் பயணமாகச் சென்றால் ஆயிரக்கணக்கில் வருகின்றன! எல்லா மனுக்களின் பேரிலும் நடவடிக்கை எடுப்பது மிகக் கடினம். முக்கால்வாசி மனுக்கள் வேலை வேண்டித் தரப்பட்டவை. இவை வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையின் பிரும்மாண்டமான பரிமாணத்தையே உணர்த்துகின்றன. வேலை வாய்ப்புகளை எளிதில் வழங்கும் வகையில் சிறுதொழில்களுக்கு வரி குறைப்பையும் சலுகையையும் அறிவிக்க என்னைத் தூண்டியதே இந்த மனுக்கள்தான்... நிர்வாகத் தாமதங்கள் குறித்தும் அரசு அதிகாரிகள், காவல் துறை அதிகாரிகள் போன்றவர்களால் இழைக்கப்படும் அநீதிகள் பற்றியும் பல மனுக்கள் வருகின்றன. அவற்றின் பேரில் நடவடிக்கை எடுக்கத்தான் செய்கிறேன். அதனால் சம்பந்தப்பட்டவர்கள் எச்சரிக்கை அடைகிறார்கள்.

கேள்வி: சிறு சிறு காரியங்கள் கூட உங்களிடம் மனுக் கொடுத்தால்தான் நடக்கின்றன என்றால் அது நிலைமை எவ்வளவு மோசமாக உள்ளது என்பதைத்தானே உணர்த்துகிறது?

பதில்: உண்மை; அதற்காக நான் மனுக்களைப் பெற்றுக் கொள்ளாமல் இருந்து விட முடியாது. சாதாரண மக்களும் அணுகக் கூடிய தூரத்தில் நான் இருந்தாக வேண்டும். கூடவே இந்த நிலைமையை மாற்றியமைப்பதற்கான முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும்.

கேள்வி: உங்களுக்குப் பிறகு பதவியேற்கும் மக்கள் பிரதிநிதியும் இதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் இல்லையா...?

பதில்: ஆமாம். எளிதில் அணுகக் கூடியவராய் அவர் இருப்பது நல்லது. அது, அதிகாரிகள் விழிப்புணர்ச்சியுடன் செயலாற்ற உதவும்.

கேள்வி: அரசியல்வாதிகள் மனுக் கொடுத்தால்....?

பதில்: அவற்றையும் வாங்கிக் கொள்வேன். நியாயமானவற்றைக் கவனிப்பேன். தகுதியற்ற சலுகைகள், சிபாரிசுகள் போன்றவை என்னிடமிருந்து கிடைக்காது என்பது அவர்களுக்கே தெரியும்.

கேள்வி: உங்கள் பதவி ஏற்பு பொது விழாவாக ராஜாஜி மண்டபத்தில் நடந்ததே. இதற்கு முன்னர் எந்த ஆளுனருக்கும் இப்படி நடக்கவில்லையே...?

பதில்: பொது விழா எதுவும் அன்று நடத்தப்படவில்லை. வழக்கப்படி பதவிப் பிரமாணம்தான் ஏற்றுக் கொண்டேன். பிறகு ஒரு சிறிய வரவேற்பு இருந்தது. அதுவும் வழக்கத்துக்கு மாறான விஷயம் அல்ல. ஆனால் பொது விழாவோ பாராட்டு விழாவோ எதுவும் நடத்தப்படவில்லை. கேரளாவில் எனது சொந்த கிராமத்தில் நடத்திய பாராட்டு விழாவைத் தவிர வேறு எந்தப் பாராட்டு விழாவுக்கும் நான் சம்மதிக்கவில்லை.

கேள்வி: ஏன்...?

பதில்: கடமைகளைச் செய்வதில் பாராட்டுவதற்கு என்ன இருக்கிறது...?

எனக்கு அதில் நம்பிக்கை கிடையாது. என் சொந்த கிராமத்தில் நான் அதற்கு ஒப்புக் கொண்டது கிட்டத்தட்ட ஒரு குடும்ப விவகாரம் போன்றது. அவர்கள் என் படிப் படியான முன்னேற்றத்தில் உண்மையாக மகிழ்கிறார்கள்; அவர்களுக்கு ஓர் ஏமாற்றம் அளிக்கக் கூடாது என்பதால்தான் ஒப்புக் கொண்டேன்.

கேள்வி: மத்திய அரசு தமிழகத்துக்கு வழங்கும் அரிசி அளவைப் பாதியாகக் குறைத்து விட்டதே.... எப்படி சமாளிக்கப் போகிறோம்....?

பதில்: வாக்களித்தபடி, மக்களுக்கு அரிசி, அக்டோபர் வரை இப்போதைய அளவே தொடர்ந்து வழங்கப்படும். எண்பதாயிரம் டன் ஒதுக்கீட்டை மத்திய அரசு நாற்பதாயிரமாகக்குறைத்ததைத்தொடர்ந்து, பழைய ஒதுக்கீட்டையே மீண்டும் அளிக்க வேண்டும் என்று மத்திய அரசை வலியுறுத்திக் கொண்டிருக்கிறோம். பிரச்னை ஏதும் இருக்கும் என்று தோன்றவில்லை.

கேள்வி: காவேரிப் பிரச்னை குறித்தும் கச்சத்தீவுப் பிரச்னை குறித்தும் மத்திய அரசிடம் வலியுறுத்திப் பேச வேண்டும் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?

பதில்: கச்சத்தீவுப் பிரச்னை என் அதிகாரத்துக்கு அப்பாற்பட்டது. காவேரி நதி நீர்ப் பங்கீடு பற்றியும் தெலுங்கு கங்கை பற்றியும் மத்திய அமைச்சர் தினேஷ் சிங்கிடம் வலியுறுத்திப் பேசியுள்ளேன். அவரும் பிரதம செயலர்களையும் இதர அதிகாரிகளையும்அழைத்துப்பேசியுள்ளார். பிரதமரிடமும் இவ் விஷயத்தின் முக்கியத்துவத்தையும் அவசரத்தையும் வலியுறுத்தியிருக்கிறேன். விரைவில் ஏதேனும் நடக்கக் கூடும்.

கேள்வி: நடக்கக்கூடும் என்றுதான் சொல்கிறீர்கள்....?

பதில்: ஆமாம். உண்மையில் நடக்கிற வரையில் வேறு எப்படிச் சொல்ல முடியும்?

கேள்வி: குமார் நாராயண் விவகாரத்தைத் தொடர்ந்து நீங்கள் ராஜினாமா செய்தது ஏன்?

பதில்: அந்தச் சமயத்தில் அப்படிச் செய்வது மட்டுமே சரியானதாக எனக்குத் தோன்றியது. எனது அலுவலகத்தைச் சேர்ந்த சிலர் தவறு செய்துள்ளார்கள் என்பதற்கான ஆதாரங்கள் தோன்றிய கணத்திலேயே அந்த முடிவை எடுத்து விட்டேன். மறுபரிசீலனைக்கே இடம் இருக்கவில்லை. அவ்வாறு செய்திருக்காவிட்டால் நான் மனச்சாந்தியின்றி அவதியுற்றிருப்பேன்.

பேட்டி: சீதா ரவி

மேலட்டை வண்ணப்படம், புகைப் படங்கள்: கே. வி. ஆனந்த்


தந்தை பிரமை
அனில் சாஸ்திரி
ஊழல் எதிர்ப்பு
வி.பி.சிங்
பணபலம்
அதிகார பலம்
அலகாபாத் இடைத் தேர்தல்


குழந்தைங்க விளையாட்டை விட்டுத் தள்ளுங்க! நாம சமாதானம் பேசுவோம்!
பாக்
ரேகன்
பாரதம்
உச்சி சமாதானப் பேச்சுகள்


தேர்தல் (பருவ மழை)
ராஜீவ் வாழ்க! ஜெயலலிதாவோடு கூட்டணி!...
ஜெயலலிதாவோடு கூட்டணி
சுகமான சங்கீதம்!
தவளைகள் தொல்லை சகிக்க முடியலியே!
கே.என்.சிங்
பூடாசிங்



# கல்கி



1988 ஜூன் 5
மலர் 46 இதழ் 45
விபவ வைகாசி 23

## அலகாபாத் வழங்க வேண்டிய தீர்ப்பு

"வி. பி. சிங்கை எதிர்த்து யார் நின்றாலும் ஒருவேளை டெபாசிட்டைத் திரும்பப் பெறுவது சாத்தியமாகலாம்; ஆனால் அமிதாப் நின்றால் நிச்சயமாக டெபாஸிட் இழப்பார்!"

இப்படி, பொது மக்களை அந்த வட்டாரப் பத்திரிகை நிருபர் ஒருவர் பேட்டி கண்ட போது, வாக்காளர்களில் சிலர் கூறியுள்ளனர். இத்தகைய சூழ்நிலையில், அமிதாப், அலகாபாத் பக்கமே தலைகாட்டுவதில்லை என்று ஒதுங்கிக் கொண்டதில் வியப்பில்லை. அதனைக் கௌரவமான பின்வாங்கல் என்று ஏற்றுக் கொள்ளவும் செய்யலாம். ஆனால் இ. காங்கிரஸ் பொதுக் காரியதரிசி குலாம் நபி ஆஸாத், அமிதாபுக்கு உடம்பு சரியில்லையென்றும் அயல் நாடுகளில் சிகிச்சை பெற்று வருகிறார் என்றும் விலாசமே தெரியவில்லை என்றும் சொன்னதுதான் கேலிக்கும் சிரிப்புக்கும் இடமளிப்பதாகி விட்டது. பாரம்பரியப் பெருமை மிக்க ஓர் அகில இந்தியக் கட்சிக்கு, அமிதாப் பம்பாயில் ஷூட்டிங்கில் பங்கெடுத்து வரும் போதே, இப்படி ஓர் அற்பத்தனமான பொய் கூறி, சப்பைக் கட்டுக் கட்ட வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது? இந்த அசட்டுத்தனத்துக்காகக் கட்சிக்கும் அதன் தலைவருக்கும் நமது அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அமிதாபுக்குப் பதில் சுனில் சாஸ்திரியை வேட்பாளராகத் தேர்ந்தெடுத்தது சாமர்த்தியம் மட்டுமல்ல; ராஜதந்திரம் என்றே கூறலாம். வாமனர் லால்பகாதூர் சாஸ்திரியின் வானளாவிய நேர்மையும் நல்லொழுக்கமும் நாம் அறியாதவை அல்ல. அவரது மகன் சுனில் பற்றி இதுவரை குற்றம் குறை ஏதும் நாம் கேள்விப்படவும் இல்லை. அலகாபாத் மக்களில் பலர், அவருக்கு நல்லாதரவு தந்து அவர் வளர்ச்சிக்கு உதவ வேண்டும் என்று தீர்மானித்தால் வியப்பதற்கில்லை.

'அமிதாப் போட்டியிடா விட்டால் நானும் தேர்தலுக்கு நிற்க மாட்டேன்' என்று முதலில் கூறிய வி. பி. சிங், இப்போது அந் நிலையிலிருந்து மாறி, சுனிலுக்கு எதிராக முஷ்டி உயர்த்துகிறார். 'இது தவறில்லையா? வாக்கு மீறியதாகாதா?' என்று சிலர் கேட்பதில் அர்த்தமிருக்கிறது. ஆனால் அதே சமயம், "உங்களை ஆதரிக்க எல்லா எதிர்க் கட்சிகளும் ஒப்புதல் அளித்திருக்கும் வேளையில் கடைசி வினாடியில் நீங்கள் பின் வாங்கினால், மாற்று வேட்பாளருக்கு ஏற்பாடு செய்ய முடியாது என்பதுடன், எதிர்க் கட்சிகளின் ஒற்றுமையும் குலையுமே? அமிதாப் களத்தில் இல்லாத போது நீங்கள் போட்டியிடுவது வாக்கு மீறல் எனில், இப்போது நீங்கள் விலகிக் கொள்வது உங்களை நம்பியவர்களைக் கைவிட்டதாகுமே?" என்ற எதிர்க் கேள்விகளும் எழுந்தன.

ஒரு தர்மசங்கடத்தில் ஆழ்ந்த வி. பி. சிங், இப்படியும் அப்படியும் அலைபாய்ந்து கடைசியில் போட்டியிடுவது என்றே தீர்மானித்து விட்டார். இப்படி அமிதாப் விஷயத்தைக் கடைசி வினாடி வரை மர்மமாக வைத்திருந்து, வி. பி. சிங்கைத் தேர்தல் வலையில் சிக்க வைத்த அளவில், காங்கிரஸ் முதல் கட்ட வெற்றி பெற்று விட்டது என்று கூறலாம். எதிர்க் கட்சிகள் காட்டும் ஒற்றுமை தாற்காலிகமானது என்பதால் அதில் தார்மீக பலம் இல்லை. ஆனால் வி. பி. சிங்கின் முடிவும் தவறானது அல்ல. வி. பி. சிங் எதிர்ப்பது அமிதாப் என்ற சினிமா நடிகரையோ அமிதாப் என்ற அரசியல்வாதியையோ அல்ல. அமிதாபும் அவரது சகோதரரும் சில பல ஊழல்களைச் செய்திருக்கிறார்கள் என்று நம்ப இடமிருப்பதால் எதிர்க்கிறார். இவர்களைப் போலவே வேறு பல பண முதலைகளும் ஊழல்கள் புரிவதற்கு இடமளிக்கும் காங்கிரஸ் ஆட்சியையும் அதன் கொள்கைகளையும் திட்டங்களையும் அவற்றை நிறைவேற்றக் கையாளப்படும் செயல் முறைகளையும் எதிர்க்கிறார்.

எனவே, இன்று அலகாபாத் மக்கள் அளிக்க வேண்டிய தீர்ப்பு, 'அமிதாபா? வி.பி. சிங்கா?' என்பது அல்ல. 'சுனில் சாஸ்திரியா? வி. பி. சிங்கா?' என்பதும் அல்ல! தங்கள் நாடாளுமன்றப் பிரதிநிதி யார் என்பது கூட அல்ல! பின்னர் எது அவர்கள் முன்புள்ள பிரச்னை?

'லஞ்ச ஊழலுக்கும், ஸ்விஸ் வங்கிக் கணக்குக்கும், கமிஷன் பேரத்துக்கும் இடமளிக்கும் ராஜீவ் காந்தியின் இ. காங்கிரஸ் ஆட்சியை நீடிக்கச் செய்வதா? நிராகரிப்பதா?' என்பதுதான் அவர்கள் அளிக்க வேண்டிய தீர்ப்பு. பஞ்சாப், கூர்க்காலாந்து, இலங்கை போன்ற எந்தப் பிரச்னையையும் தீர்க்க முடியாமல், விலைவாசிகளைக் கட்டுப்படுத்த முடியாமல், வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க முடியாமல் தவிக்கும் ராஜீவ் அரசுக்கு இது ஓர் அரையாண்டுப் பரீட்சை! மார்க் போட வேண்டியவர்கள் அலகாபாத் மக்கள். பெயில் மார்க், ஆட்சியை மாற்றி அமைக்காது எனினும் எச்சரிக்கை செய்யும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# சர்க்கரை இல்லாத மைசூர்பாகு!

• 22.5.88 இதழ் சிறுகதைச் சிறப்பிதழா என்ன? நான்கு கதைகளுமே 'நறுக்'! காதல் வண்டி நிற்கும் இடம் — சிறுகதையில் தென்றலினும் இனிய நடை தெரிந்தது. மற்ற மூன்று கதைகளும் இன்றைய நிலைமையைத் தத்ரூபமாக விளக்கின. நான்கு கதாசிரியர்களுக்கும் பாராட்டுக்கள்!

விருதுநகர். கே. டி. ஆர். சேகர்.

• 22.5.88 கல்கியில் 'காதல் வண்டி நிற்கும் இடம்' என்ற கதையில், பூ விற்கும் பொன்னம்மா, காலை 8.15 சபர்பன் ரயிலில் ஏறி, கடம்பத்தூரில் இறங்குவாள் என்றும், அதற்குப் பிறகு திருவள்ளூர் வரை போர்ட்டருடன் கதாசிரியர் பயணம் செய்வதாகவும் எழுதியுள்ளார். இது எப்படி சாத்தியம்? கடம்பத்தூர் என்பது திருவள்ளூருக்கு அடுத்த ரயில் நிலையம் ஆயிற்றே!

சென்னை — 53. வ. சங்கர்.

• சரியான விகிதத்தில் தண்ணீரும் கடலை மாவும் கலந்து, பதமாகக் கிளறிவிட்டு, மணப்பதற்கு அருமை நெய் விட்டு... ஆஹா... இந்தாங்க சார் — அருமையான மைசூர் பாகு... அட என்ன சார் முகத்தைச் சுளிக்கறீங்க? அடடா... மெயின் அயிட்டம் சர்க்கரை சேர்க்க மறந்து போச்சு... — இப்படிதான் சார் இருந்தது இந்த வாரம் வெளியான சிவாஜி சார் பேட்டி — நீங்கள் கேட்க நினைத்த துணைக் கேள்விகளுக்குப் பதில் இல்லாமல்... ஸ்வீட்லெஸ் மைசூர் பாகு!

இராமநாதபுரம். வேணுகோபால்.




• கல்கி அளித்த நல்லதொரு பேட்டி வாய்ப்பு மூலம் விவரம் தெரிந்த வாக்காளர்களின் நியாயமான சந்தேகங்களைப் போக்கி அரசியலில் இன்னும் ஸ்திரமாக வேரூன்றிக் கொள்ளும் சந்தர்ப்பத்தைச் சிவாஜி இழந்து விட்டார்!

கம்பரசம்பேட்டை. என். பாலு.

• பதில்களை எழுதிக் கொடுத்து சிவாஜி அளித்த பேட்டி. கடுகு இல்லாத ரசம்! நீங்கள் பேட்டிக்கு இடையில், அடைப்புக்குள் கொடுத்திருந்த கேள்விகளிலேயே ஒரு முழுப் பேட்டிக்கான விஷயம் இருக்கிறதே!

சென்னை — 17. எஸ். வி. ராஜசேகர்.

• 'கல்கி விடுமுறை மலர்' பற்றி அறிவித்த வண்ணப் படமான தென்கு மரநாட்டா காட்சி 'பியூட்டிஃபுல்!'

கோவை. உமார்த்தி.

• போக்குவரத்துக் காவல் துறை கமிஷனர் எஸ். ரஞ்சித் சிங்கிடம் கேட்கப்பட்ட சூடான கேள்விகளும் அதற்கு அவர் அளித்த சாமர்த்தியமான பதில்களும் ரசிக்கும்படி இருந்தன.

சென்னை — 41. சி. ஏ. ராஜு.

• 'தெற்கத்திக் கள்ளன்' என்றொரு படம். அதற்குக் காலதாமதமாக ஒரு பக்க விமர்சனம்! அதிலும் முதல் பக்க அந்தஸ்து வேறு!

பெங்களூர் — 25. கே. ஜி. எஸ். பழனிச்சாமி.

• தராசு பதில்கள் வெகு அருமை. அதிலும் கேள்வி மட்டும் தந்து பதிலை அடுத்த இதழில் தரலாமென்று பத்திரப்படுத்தி விட்ட கம்பாளரின் கைவண்ணம் மிக அருமை. புரூப் ரீடர் தூங்கியது அதை விட அருமை. இப்படிப்பட்ட பல அருமைகளை ஒரே இதழில் தந்து கொண்டிருக்காதீர்கள் வாசகர்கள் தாங்க மாட்டார்கள்.

குறிஞ்சிப்பாடி. த. இராஜசேகரன்.

• உங்க பாணியே தனிதான்! இரண்டு கேள்விகளுக்கு ஒரே பதில் அளித்துள்ளீர்களே, பலே! பலே!! வெகுவாக ரசித்துப் படித்தோம்.

விருத்தாசலம். ஏ. டி. சௌமியன்.

• அஹிம்சையால் நமக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த காந்தியின் படத்தைச் சட்ட சபையில் மாட்டி வைத்துக் கொண்டே மைக்குகளால் மண்டையை உடைத்துக் கொண்டார்கள் நமது பிரதிநிதிகள்....! அப்படியிருக்க, சர்வோதய சங்கக் கடைக்குப் பக்கத்தில் மதுக்கடை என்பதெல்லாம் தூசு....! காந்தி பெயரிலேயே மதுக்கடை ஆரம்பிக்கவில்லையே என்பதை நினைத்துத் திருப்திப் படுங்கள்....!

தஞ்சை. கவிஞர் சுகன்.

• தங்கள் 22.5.88 கல்கி இதழில் 'இங்கே ஒரு காந்தி சமாதி' என்றதலைப்பில்மணிமகன் என்பவர் அதிர்ச்சி தரும் செய்தி ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார். அதே போல், கும்பகோணம், நாகேஸ்வரன் வடக்கு வீதியில், சர்வோதய சங்கம் காதிபவனுக்கு நேர் எதிரிலும் மதுக்கடை ஒன்று உள்ளது!

தாராபுரம். கே. கலியபெருமாள்.

• தலையங்கத்தில் முழுப் பூசணிக்காயைச் சோற்றிலே மறைக்கப் பார்ப்பதாகக் குறிப்பிட்டிருந்தீர்கள். முழுப் பூசணிக்காயைச் சேற்றிலே மறைக்கப் பார்ப்பதாகத் தான் கூற வேண்டும்; 'சோற்றில்' அல்ல! அந்தக் காலத்தில், அரசனுக்கோ, நில உடைமையாளருக்கோ தாம் விளைவித்தப் பூசணிக் காயைக் கொடுக்க விரும்பாத விவசாயி அதனை மண்ணுக்குள் (சேற்றில்) மூடி வைக்க, சில நாட்களில் அது அழுகி வீணாகிப் போய் விடும். இந்த வழக்கத்தையொட்டியே 'முழுப் பூசணியைச் சேற்றில் மறைப்பது' என்ற பழமொழி எழுந்தது. அதுவே மருவி 'சோற்றில் மறைப்பது' என்றாகி விட்டது!

கோவை — 37. டி. ரங்கசாமி.

# சிவப்புத்தாலி

நிஷாந்தி — ராம்கி காதல் கதை இந்தப் பக்கம்.

பெரிய தோப்பு — சின்னத் தோப்பு கொலைக் கதை அந்தப் பக்கம்.

அனாதையாய் அலையும் சரண்ராஜின் உருக்கக் கதை ஒரு பக்கம்.

இடைவேளைக்கு மேல் வந்து ஃப்ளாஷ் பேக்கில் சூடுகள் வாங்கும் சரண்யாவின் கண்ணீர்க் கதை மறுபக்கம்.

ஏதாவது ஒரு கதையை எடுத்துக் கொண்டு கவனம் செலுத்தியிருக்கக் கூடாதா? அப்படிச் செய்யாததால் அவ்வப் போது பொறுமை சோதிக்கப்படுகிறது.

நடிப்பில் இரண்டு பேர் முதல் வகுப்பில் பாஸ் செய்கிறார்கள்:

1. (பெயர் விஸ்வம்?) சின்னத் தோப்பு வில்லன். பாக்யராஜ் ஸ்டைலில் அனாயாச மாக வசனம் பேசும் இயல்பான அண்ட் வித்தியாசமான வில்லன்.

2. சரண்யா. குரல் சொந்தமா, வாட கையா? சொந்தமெனில் அதற்கு ஒரு ஸ்பெ ஷல் சபாஷ். 'கண்ணாடி பார்க்காதே, அலங் காரம் பண்ணிக்காதே' என்கிற இரண்டு வரிகளை எத்தனை விதமான மாடுலேஷன் களில் சொல்கிறார்! சரண்யா அனேகமாகக் கொடி பறக்க விடுவார் என எதிர்பார்க்க லாம்.



ராம்கி — பிரபு ஸ்டைலை முயற்சி செய்வ தைத் தவிர்த்தால் சிறப்பு. அழகான முகம். அழகான உடல். கம்பு அற்புதமாகச் சுழற்று கிறார்.

நிஷாந்திக்கு அடாவடித்தனமான பாத் திரம். முடிந்த வரை உழைத்திருக்கிறார்.

சரண்ராஜ் — ஹீரோ. துடிப்பாக நடிக் கிறார் என்றாலும் ஹீரோவாக, அதிலும் வேட்டி கட்டிய சோகமான கிராமத்து ஹீரோவாக ஏற்க முடியவில்லை. ஒரு முண்டா பனியன், வேட்டி. பதினாறு ரீலும் இதே காஸ்ட்யூம். 'போர்' டா சாமி.

திரைக்கதையில் ஒரு சீரான ஓட்டம் மிஸ் ஸிங். திடீரென்று 80 கி.மீ. ஸ்பீட். சட் டென்று 10 கி.மீ. ஸ்பீட். மறுபடி வேகம். மறுபடி நிதானம்.

க்ளைமாக்ஸை முன்கூட்டியே யூகம் செய்ய முடிவதால் சப்!

இசை, தேவர் வழங்கிய சங்கர்—கணேஷ். ஸோ, ஸோதான்.

நண்பர்களுக்குச் சிபாரிசு செய்யக் கொஞ்சம் யோசிக்கத்தான் வேண்டியுள் ளது.

— ஜெயமன்மதன்



# ஆகவே, செக்ஷன் 302படி...

நிவிதாவால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. நான் கேட்டதெல்லாம் ஷியாம் பேசின வார்த்தைகள்தானா? இத்தனைப் பணிவாக, நாகரிகமாகக் கூடப் பேசத் தெரியுமா ஷியாமுக்கு?

'உனக்கு வேறே வழி இல்லை, என் நிபந்தனைக்குச் சம்மதிச்சுத்தான் ஆகணும்' என்று இளக்காரமாக, அலட்சியமாக அமிலத்தில் நனைத்த வார்த்தைகளைப் பிரயோகித்த அதே உதடுகள்தானா இவ்வளவு மசண்ட்டாக மன்னிப்புக் கேட்கின்றன?

எது அசல் குணம்?

படிப்படியாய்த் திட்டம் அமைத்து, என்னை மடக்கி, தன் வக்ர ஆசைக்குக் கட்டுப்படுத்த நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டு காத்திருந்த குள்ள நரித்தனம்தான் உண்மையான ஷியாமா? இல்லை, தவறு என்பதை உணர்ந்த வினாடி, தடாலென்று கௌரவத்தைக் கழற்றி வைத்துவிட்டு எதிரியிடம் மனமார மன்னிப்பு கேட்கும் பக்குவம்தான் உண்மையான ஷியாமா?

ஷியாமை நம்ப முடியாது. போலீஸ் மற்றும் என் தோழிகள் முன்னிலையில் மிக பலத்த அவமானத்தை வாங்கியிருக்கிறான். தான் என்கிற திமிர் பிடித்த எந்த ஆணாலும் இப்படிப்பட்ட மகா அவமானத்தைச் சுலபமாக ஜீரணித்துக் கொள்வதோ, சகஜமாக எடுத்துக் கொள்வதோ இயலவே இயலாது.

ஷியாமின் சுயரூபம்தான் நேற்று வெட்ட வெளிச்சமாகி விட்டதே. அழுக்கு படிந்த மனம். காரியம் சாதிக்கிற வெறி. கைகூடவில்லை எனில், பெண் என்றும் பார்க்காமல் பழி வாங்கும் ரௌத்ரம். இரக்கம் என்பது கடுகளவுகூடக் கிடையாது.

நான் மட்டும் சாமர்த்தியமாகச் செயல்படவில்லை என்றால்... என் நிலை என்னவாகியிருக்கும்? என் மேஜையில் என் கைப்பையில் இருந்து திருட்டுப் போனதாக அவன் சொன்ன டாகுமெண்ட்டும், டிராஃப்ட்டும் போலீஸ் கைப்பற்றியிருந்தால், அதுக்குப்பின் நான் என்ன போராடினாலும் குற்றத்திலிருந்து வெளிவரவே முடியாது.

அப்பேற்பட்ட மகத்தான, துல்லிய வலை விரித்த ஷியாமிடம், திடீர் என்று மாற்றம் ஏற்படுவதாவது... உடனே மன்னிப்புக் கேட்பதாவது... அதுவும் யாரால் அவமானப்பட்டோமோ அவரிடமே! வாய்ப்பே இல்லை.

இது வேஷம். முழுக்கப் பொய்.

மற்றும் ஒரு விபரீத நாடகத்திற்கான அஸ்திவாரம்தான் இந்தச் 'சண்டைக்காரன் காலில் விழுகிற' யுக்தி.

மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அதே சமயம் ஷியாம் திருந்தி விட்டதை நம்பியது போலவும் காட்டிக் கொள்ள வேண்டும்.

வந்த பிரச்னையை அழகாகச் சமாளித்தாயிற்று. இனி.. வரப் போகிற பிரச்னை எதுவாய் இருந்தாலும் வருமுன் தவிர்க்கத் தயாராய் இருக்க வேண்டும்.

நிவிதாவிற்கு மனத்தில் பாரம், கலக்கம் எல்லாம் காணாமல் போய் — ஷியாமுடன் ஏற்பட்டுள்ள இந்த மோதல் ஒரு சவால் விடும் சுவாரசியமான விளையாட்டாகவே தோன்றிற்று. எது வந்தாலும் பார்த்து விடுவோம், சமாளித்து விடுவோம் என்று ஒரு பலமான நம்பிக்கை விழுந்திருந்தது.

அதே சமயம் —

வேறு யாருமில்லை என்றாலும் தனிமையில் — இக்கட்டான சூழ்நிலையில் படுக்கைக்கு அழைத்தது ஓர் அவமானமே — அந்த அவமானத்திற்கு ஷியாமுக்கு இந்தப் பதிலடி போறாது. இன்னும் தேவை என்று மனம் ஆர்ப்பரித்தது.

ஷியாமுக்கு இன்னும் உரைக்கும்படியாக, நினைத்து நினைத்து உருகும்படியாக, மன்னிப்பு, மன்னிப்பு என்று தவிக்கும்படியாக — எதையாவது செய்ய வேண்டும் என்று பரபரத்தாள்.

நிதானமாக யோசிக்க வேண்டும்.

**கா**லை ஆறு மணிக்கு லேடீஸ் ஹாஸ்டலின் வாட்ச்மேன் 'இது பார்வையாளர் நேரமில்லை' என்று வினோத் குமாரை உள்ளே அனுமதிக்க மறுத்தான். மிக முக்கியமான செய்தி என்று எடுத்துச் சொல்லியும்... 'என்னிடம் சொல்லுங்கள், நான்

பட்டுக்கோட்டை பிரபாகர்

சொல்லி விடுகிறேன்' என்று பிடிவாதம் பிடித்தான்.

வினோத் குமார் கையில் சூட்கேசுடன் அங்கிருந்து விலகி அருகாமை பெட்ரோல் பங்க் வந்து அனுமதி கேட்டு, போன் செய்தான் ஹாஸ்டலுக்கு. நிவிதாவுடன் பேச வேண்டும் என்றான். சில விநாடிகளில் பேசினான்.

''ஹலோ நிவி, நான் ராத்திரி பூரா பயணம் செஞ்சி இப்பதான் மெட்ராஸ் வந்தேன். இன்னும் வீட்டுக்குக் கூடப் போகலை. நேரா உன்னைப் பார்க்க வந்தேன். வாட்ச்மேன் உள்ளே விடலை. அதனால் பக்கத்து பெட்ரோல் பங்க்லேர்ந்து பேசறேன். சொல்லு. நீ எப்படி இருக்கே?''

''நல்லா இருக்கேன். நான் போன்ல சொன்ன பிரச்னை ஸால்வ் ஆகிடுச்சி. பாவம், உங்க வேலையைக் கெடுத்துட்டேன். நிலைமையை நானே சமாளிச்சுட்டேன்.''

''எனக்குத் தலை, வால் எதுவும் புரியலை. நேர்ல விவரமாப் பேசினாத்தான் புரியும். போலீஸ்ன்னு சொன்னே. என்னை யாராச்சும் கேட்டா ஹரின்னு சொல்லச் சொன்னே. எனக்கு எதுவும் விளங்கலை. நீ இப்போ வெளில வரலாமில்லையா?''

வரலாம்.''

''போனை வச்சிட்டு வா. ரைட் சைடுல இருக்கிற பெட்ரோல் பங்க் வாசல்ல நிக்கிறேன். பேசலாம்.''

''இதோ வர்றேன் வினோத்.''

கொஞ்ச நேரத்தில் எடுத்துக் கொள்வதாகச் சொல்லி, சூட்கேசைப் பெட்ரோல்





''எதுக்கு வாட்ச்மேன் அந்த ஆள் மீது 'வள்'ளுன்னு எரிஞ்சு விழுறே?''

''பின்னே... 'போன வாரம் செத்துப் போன காவல் நாயோட வேகன்ஸியை ஃபில் பண்றது நீங்கதானு?'ன்னு கேட்டா யாருக்குத்தான் கோபம் வராது?''

— குடியாத்தம் மூ. மோகன்.

பங்கிலேயே வைத்து விட்டு வெளியில் வந்து அருகில் இருந்த காப்பிக் கடையில் தண்ணீர் வாங்கி வாய் கொப்புளித்து விட்டு, ஒரு காப்பி அருந்தி முடித்த போது, நிவிதா வந்தாள்.

வானம் பாதி வெளிச்சமும், மீதி இருட்டு மாய்க் கலங்கிப் போயிருந்தது. வெகு தூரத்திலிருந்து வரும் திருவள்ளுவர் விரைவுப் பேருந்துகள் விர்ர், விர்ர் என்று தடதடத்துக் கடந்து கொண்டிருந்தன. டீக்கடைகள் மட்டும் முன்னதாக விழித்துக் கொண்டிருக்க.... பால் கேன் கட்டிய சைக்கிள்களும், பேப்பர் பண்டல் கேரியரில் செருகின சைக்கிள்களும் விரைந்தன.

''நடந்துகிட்டே பேசலாம். சொல்லு. விவரமாச் சொல்லு. என்ன நடந்துச்சு?''

''சொல்றேன் வினோத். ஆனா நீங்க உணர்ச்சிவசப் படக் கூடாது. ஆத்திரப் படக் கூடாது. அமைதியாக் கேட்டுக்கணும்.''

''என்ன இது, முன்னுரை பலமா இருக்கே....''

''நடந்த சதியும் பலமானதுதான் வினோத். எனக்குப் 'பொக்கே' அனுப்பினதும், பார்சல்ல புடைவை அனுப்பினதும் யார் தெரியுமா? எங்க மேனேஜர் ஷியாம்!''

''ஈஸ் இட்?''

''ஆமாம். அவனே ஒத்துக்கிட்டான். என்ன அவன், இவன்னு சொல்றனேன்னு பார்க்கறீங்களா, அதைவிட மரியாதைக் குறைவான வார்த்தைகள் இருந்தா, அதைத்தான் பயன்படுத்தணும். ஸ்கவுண்ட்ரல்!''

நிவிதா வரிசையாக, நிதானமாகச் சொன்னாள். முகமில்லாத யாரோ ஹரி போனில் தொடர்பு கொண்டது, வினோத் குமாரைப் பற்றிச் சொல்வதாகச் சொல்லி ஹோட்டலுக்கு வரவழைத்து, சந்திக்காமல் போனது, மேனேஜர் அழைத்து எச்சரித்தது, நேற்று காலையில் டாகுமெண்டைப் படிக்கக் கொடுத்தது, மாலை அனைவரும் சென்றதும் வந்து வினோதமாக நடந்து கொண்டு நிபந்தனை விதித்தது, நியாயம் வெல்லும் என்றுவிட்டு இவள் புறப்பட்டு வந்தது, ஹாஸ்டலுக்குப் போலீஸ் வந்தது, அலுவலகத்தில் ஷியாம் அவமானப்பட்டு நின்றது, பிறகு போனில் உருக்கமாக மன்னிப்பு கேட்டது வரை சொல்லி முடித்தாள்.

''நிவிதா, என்னே உணர்ச்சிவசப் படாதேன்னு சொல்றே, எப்படி முடியும்? உன்னைக்கேவலமா ஒருத்தன் வலைவிரிக்கப் படுக்கைக்குக் கூப்பிட்டிருக்கான். நான் சும்மா இருக்க முடியுமா? ஐ ஆம் பாய்லிங்! இன்னைக்கு உன் ஆபீசுக்கு நான் வரப் போறேன். அவ்வளவு ஸ்டாஃப் முன்னிலையிலே அவனே இழுத்துப் போட்டுப் புரட்டி எடுக்கப் போறேன்.''

''ரவுடிப் பேச்சு வேணாம் வினோத். தனிமையிலே ஷியாம் என்னைக் கேட்டது இப்போ உங்களுக்கு மட்டும்தான் தெரியும். அதை ஆபீஸ் முழுக்கப் பரப்பியாகணுமா? அவனை அடிச்சுட்டா சரியாப் போச்சா? நமக்குத்தான் பிரச்னை. பதிலுக்கு நான் நேத்து சரியா அவமானப்படுத்திட்டேன் ஆனாலும் என் ஆத்திரம் தணியலை இன்னும் ஏதாச்சும் செய்யலாம்னு துடிப்பா இருக்கு.''

''என்கிட்டே பொறுப்பை விடு நிவிதா. அதுக்கெல்லாம் ஆட்கள் இருக்காங்க. கையை வெட்டணுமா, காலை வெட்டணுமா?''

''அவன் மனசை வெட்டணும். இப்படி நடந்துக்கிட்டோமேன்னு நொந்து நொந்து தவிக்கணும்.''

''அதுக்கு என்ன செய்யணும்னு சொல்றே?''

''ஒரு திட்டம் யோசிச்சுக்கிட்டிருக்கேன். நாளைக்குச் சொல்றேன்.''

''இல்லை நிவிதா, இந்த மாதிரி ஆளுங்களுக்குச் சாத்விகமான முறையிலே பதிலடி தந்தா உரைக்காது. காயத்திலே உப்பு வச்ச மாதிரி சர்ருன்னு படணும். டை கட்டின இடியட்! படிச்ச பொறுக்கி! எவ்வளவு பெரிய பதவியில இருந்துக்கிட்டு இப்படி வக்கிரபுத்தி? இல்லை நிவிதா, என் போக்குக்கு விட்டுடு. அவனை நான்...''

''வேணாம் வினோத். ஒரு விஷயத்தை நீங்க நினைச்சுப் பார்க்கணும். நேத்து சாயங்காலம் வாட்ச்மேன் ஆபீஸுக்கு வெளியில இருந்தான். உள்ளே நானும் அவனும் மட்டும்தான் தனியா இருந்தோம். தன்னோட ரூமுக்கு என்னை ஏதாச்சும் காரணம் காட்டி வரவழைச்சுக் கதவைச் சாத்தியிருந்தா, உள்ளே என்ன நடந்தாலும் வெளியில கேட்காது. ஏ. சி. ரூம். என்னைப் பலாத்காரம் செய்ய முற்பட்டிருந்தா என்ன செஞ்சிருப்பேன்? மன வலிமை இருக்கிற அளவு ஒரு பெண்ணுக்கு உடல் வலிமை இருக்கா? போராடியிருப்பேன். ஆனாலும் அவனால் என்னை ஜெயிச்சிருக்க முடியும். என்னை அடையறதிலே அவன் பலாத்காரத்தை

'போயே போச்சு!'

'இட்ஸ் கான்!'

'காயப்!'







# போயே போச்சு!




## வலியும் வேதனையும் மாயமாய் மறைகின்றன!

பத்து இயற்கை மூலப்பொருட்களின் இதம் தரும் கலவை- இதுவே அமிர்தாஞ்சன். 90 ஆண்டுகளுக்கும் மேலாக மக்களின் பரிபூரண நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

தலைவலி, உடல்வலி, சுளுக்கு — எதுவாக இருந்தாலும் லேசாகத் தேய்த்தாலே போதும். நீங்கள் உணரும் முன்னரே உங்கள் வலியும் வேதனையும் மறைந்தே போய்விடும்!

# அமிர்தாஞ்சன்

மீண்டும் புன்னகை மலரச் செய்கிறது — விரைவாக!

அமிர்தாஞ்சன் லிமிடெட்



OBM 824 TM

நம்பலை. தான் பெரிய புத்திசாலின்னு காட்டிக்கிட்டு, தன் மூளைத் திறமையாலேயே, என்னை எதிர்ப்பே இல்லாம, இயல்பா வசப்படுத்தறதுதான் திட்டம். எத்தனை கொழுப்பு! இந்தத் திமிருக்கு, இந்த சூப்பர் ஈகோவுக்கு அவன் பாஷையிலேயே பாதி பதில் சொல்லிட்டேன். மீதியையும் அதே வழிலதான் சொல்லணும் வினோத்.''

''உன் இஷ்டம். இப்போ அவமானப்பட்ட ஆத்திரத்திலே இருக்கான் நிவிதா. அவனால் உனக்கு ஏதாச்சும் தொந்தரவுகள் ஏற்பட வாய்ப்பிருக்கு. ஜாக்கிரதையா இருக்கணும். ஒரு வாரம் லீவு போட்டுடேன்.''

''கோழைத்தனம். இனிமேல் அவனை என்னால் சுலபமா சமாளிச்சுட முடியும் வினோத்.''

''மன்னிப்புக் கேட்பதை நம்பாதே!''

''நம்ப மாட்டேனே...!''

''போகட்டும். அதெப்படி அவன் வச்ச டாகுமெண்டையும், டிராஃப்டையும் அப்புறப்படுத்தினே நிவிதா?''

''ஜீஜூம்பா வேலே அது!''

''அட! சொல்லேன்.''

''முதல்லே தவிச்சுப் போனேன். துடிச்சுப் போனேன். உண்மையா அழுதேன். அப்புறம் இதை எதிர்க்கணும்னு மனசுல தீர்மானம் வந்ததும் ஐடியாவும் உடனே ஃப்ளாஷ் ஆச்சு. ரொம்ப சிம்ப்பிள். என் மேஜை டிராயருக்கான சாவி ஒருநாள் நான் எடுத்துட்டுப் போக மறந்துட்டேன். அப்போ ஸ்டோர் ரூம், ரெக்கார்ட்ஸ் ரூம் சாவிகள் அடங்கின கொத்தை பியூன் எடுத்துக் கொடுத்து இதிலே ஏதாவது சேருதான்னு பார்க்கச் சொன்னான். அதிலே ஒரு சாவி சேர்ந்திச்சி, திறந்துட்டேன். அந்தச் சாவிக் கொத்து, எல்லாரும் எடுக்கிற மாதிரி ஓர் ஆணியில எப்பவும் மாட்டியிருக்கும். அதை எடுத்துத் திறந்து, டாகுமெண்ட்டையும் டிராஃப்டையும் எடுத்துக்கிட்டேன். டாகுமெண்ட்டை மேனேஜர் ரூம்ல அவன் திறந்தே வெச்சிருந்த முதல் டிராயர்ல வெச்சுட்டு, டிராஃப்டை ஜாக்கெட்டுக்குள்ளே வெச்சிக்கிட்டு அவன் வந்ததும் அப்பாவி மாதிரி பேசிட்டுத் திரும்பி வந்துட்டேன்.''

''நிவிதா, ஒண்ணு சொல்லட்டுமா?''

''என்ன வினோத்?''

''ரொம்ப சீக்கிரமா நாம கல்யாணம் பண்ணிக்கலாம். நீ வேலையை விட்டுடு. இல்லை போய்த்தான் ஆகணும்னா வேறே கம்பெனியில வேலை வாங்கித் தர்றேன்.''

''ஏன் வினோத்? மேனேஜர் அயோக்கியனா இருந்தா அதுக்குக் கம்பெனி என்ன செய்யும்?''

''உனக்கு மேனேஜர் மேல ஆத்திரம். அவனுக்கு உன் மேல கோபம். ஒருத்தருக்கொருத்தர் பகைமை வச்சிக்கிட்டு ஒரே ஆபீஸ்ல எப்படி? அவனுக்குக் கீழே நீ வேலை பார்க்க உனக்குச் சங்கடமா இருக்காதா?''

''இதைத் தவிர்க்க ரெண்டு வழிகள் இருக்கே வினோத். ஒண்ணு, நான் இந்த ஆபீஸ்லேர்ந்து விலகறது, இல்லை டிரான்ஸ்பர் வாங்கிக்கறது. ரெண்டு—அவனை கம்பெனியை விட்டே விலக்கறது.''

''நிவிதா?''

''எந்தப் பதவித் திமிர் அவனுக்கு இவ்வளவு மமதையைக் கொடுத்திருக்கோ அந்தப் பதவியை விட்டு அவனைத் தூக்கறதுதான் நான் நாளைக்குச் சொல்றதாச் சொன்ன திட்டம் வினோத். நேரமாச்சு. நடந்தது போதும். வாங்க திரும்பலாம்'' என்ற நிவிதாவை ஆச்சர்யமாகப் பார்த்தான் வினோத். திரும்பி நடந்தார்கள்.

தன்மானம் சீண்டப்படும்போது ஒரு பெண்ணுக்கு எவ்வளவு தைரியமும், பலமும் சேர்ந்து விடுகிறது?

''ரைட், ஜமாய். இதிலே என் பங்கு ஏதாச்சும் இருந்தா கொடு. கச்சிதமா செஞ்சு முடிக்கிறேன்'' என்றான் வினோத்.

நிவிதா அலுவலகத்திற்கு வந்து தன் சீட்டில் அமர்ந்த ஐந்தாவது நிமிடமே, பியூன் வந்து ரீஜனல் மேனேஜர் அழைப்பதாகச் சொன்னான்.

நிவிதா எழுந்து நடந்து, அறைக் கதவைத் தட்டிவிட்டு உள்ளே செல்ல, தன் நாற்காலியை விட்டு எழுந்து ஷியாம், ''வாங்க நிவிதா'' என்றான். கதவுக்கு நடந்து அதன் தாழைப் போட்டுவிட்டு அவளைப் பார்த்தான்.

''இது ஏ. சி. ரூம். இப்போ நாம தனியா இருக்கோம். அதனால...''

புருவங்கள் நெளிய அவனைப் பார்த்தாள் நிவிதா.

(தொடரும்)

''என்னடா தம்பி! பரீட்சையெல்லாம் எப்படி...? நல்லா எழுதினியா? ரிசல்ட் எப்பப் போடுறாங்க...?''

''ஜூன் இருபதாம் தேதி மாமா...!''

''அடுத்து, என்ன பண்ணப் போறே...?''

''ஓடிப் போகப் போறேன்... மாமா!''

— சுரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.




நிஜங்கள்
புரிந்தபோது...

• வண்ணப்படம்: கே. வி. ஆனந்த்.
• நடிப்பு: கிருஷ்ணமூர்த்தி, ஜெயஸ்ரீ

"ஹோட்டல் ஹர்ஷா ஹியர்!"

டெலிபோன் ரிஸீவரில் ஒரு தயக்கமான மௌனம். ஏதோ யோசித்து உறுதிப்படுத்திக் கொள்வது போல்.

"ஐ வான்ட் டு ஸ்பீக் டு தி டெலிபோன் ஆபரேட்டர் மிஸ். சௌதாமினி!"

ரிஸீவரைக் காதில் வைத்திருந்த சௌதாமினிக்குப் பேசுவது யாரென்று தெரியவில்லை. ஆண்தான். இளமையின் மிடுக்கு தொனிக்கும் குரல். இதுவரை போனில் அவள் கேட்டிராத குரல்.

சில சமயம் இப்படி குறும்புத்தனமான 'கால்'கள் வரும். அவளுக்கு வலை வீசும் முயற்சிகள், 'டேட்' கேட்கும் அநாகரிகங்கள்.. டெலிபோன் ஆபரேட்டர் வேலையென்றால் எல்லாம் இருக்கும். சகித்துக் கொள்ள வேண்டும், இல்லை சாதுரியமாக விலக வேண்டும்.

பரிதாபம் இந்த ஆண்கள்! ஒருத்தி அழகாக இளமையாக இருந்து விடக் கூடாது; பல்லையிளித்துக் கொண்டு ஒநாய் வாஞ்சையோடு ஒரு விண்ணப்பம் போட முனைவார்கள்.

"கேன் யு டெல் யுவர் நேம் ப்ளீஸ்?"

"ஐ'ம் சூர்யா. ஷாஸ்த்ரி பவன்லேருந்து பேசறேன். கே. ஆர். சூர்ய நாராயணன்."

சௌதாமினி ரிஸீவரைக் காதிலிருந்து எடுத்து யோசனையோடு அதை ஒரு விநாடி பார்த்தாள்.

அந்த சூர்யாதான். வரன் பார்த்து தேதி நிச்சயிக்கப்பட்டு முகூர்த்தப் பத்திரிகை எழுதிச் சென்ற சூர்யா! என்ன விஷயம்?

"ஹலோ... சௌதாமினி ஸ்பீக்கிங்" என்று போனை மறு காதுக்கு மாற்றிக் கொண்டு சொன்னாள்.

"சவிட் யூ..? ஹஹ... ஒண்ணுமில்லே. எங்க ஆபீசர் பிரமோஷன் ஆகிப் போறார். நாங்க ஒரு பார்ட்டி கொடுக்கணும். வி வாண்ட் டு நோ த ரேட்ஸ்."

உதட்டைக் கடித்து யோசித்தாள் சௌதாமினி. இதற்குத் தன்னை ஏன் கேட்க வேண்டும்?

"ஐ'ம் ஸாரி! நீங்க அதைப் பத்தி ரிசப்ஷன்லதான் விசாரிக்கணும். அங்க கனெக்ஷன் குடுக்கட்டுமா...?"

மிகவும் நளினமாக, நாசூக்காகச் சூர்யாவின் வரம்புகளைச் சுட்டிக் காட்டி, கேட்டாள் சௌதாமினி.

"ஓ எஸ்... ப்ளீஸ் பி கைண்ட் எனஃப்."

எதிர்முனை குரல் நைச்சியமாயிற்று. ஒரு குறிப்புணர்ந்த மாதிரி 'பிஸினஸ் லைக்' மரியாதைக்கு மாறிற்று.

'ரிசப்ஷனு'க்குத் தொடர்பு கொடுத்து விட்டு, போனைக் கொக்கியில் மாட்டி விட்டு எதிர்ச் சுவரில் மாட்டியிருந்த காலண்டரைப் பார்த்தாள். கொட்டை எழுத்தில் தேதி தெரிந்தது. ஏப்ரல் பதினாறு.

கல்யாண அழைப்பிதழை அச்சடிக்க நாளைக் காலையில்தான் பிரஸ்ஸுக்குப் போகப் போவதாக அப்பா காலையில் பேசிக் கொண்டிருந்தார்.

சௌதாமினி மனசிற்குள் ஒரு கணக்குப் போட்டாள். இன்னும் பதினெட்டு நாள் இருக்கிறது, சூர்யா அவளது அதிகார பூர்வமான கணவனாக. மே ஐந்தாம் தேதிதான் சூர்யாவின் உரிமையும் அதிகாரமும் ஆரம்பமாகும் நாள். அதுவரை தான் சௌதாமினி தான்–சுதந்திரமான சௌதாமினி. எந்த நிர்ப்பந்தங்களுக்கும் கட்டுப்படாத, பட விரும்பாத ஏற்கெனவே தாங்கியிருக்கிற சுமைகளுக்கு மட்டும் பதில் சொல்ல வேண்டிய சௌதாமினி.

"ஹோட்டல் போர்ட்டிகோவில் பிரம்மாண்டமான அந்நிய நாட்டுக் கார் வந்து நின்றது — ரோல்ஸ் ராய்ஸ்.

உதட்டில் லிப்ஸ்டிக் கோடு ஒருத்தி இறங்கினாள். அவள் பின்னால் கோட்டும் ஸூட்டுமாக ஒருவன். கணவன் மனைவியாக இருக்கலாம். என்னமோ கேட்கிறான். ஒரு டிரைவர் மாதிரி அல்லது வேலைக்காரன் மாதிரி அவன் பவ்யமாக ஏதோ சொல்கிறான். அவர்கள் படியேறுகிறார்கள்.

ஹோட்டல் ஹர்ஷாவில் இப்படி ஒரு நாளைக்கு நாற்பது ஐம்பது வெளிநாட்டுக் கார்கள் வருகின்றன. வெளிநாட்டு ஜோடிகள் வருகின்றனர் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்குப் பறந்து வரும் சுதந்திரப் பறவைகள் போல அவர்கள் எதையோ உணர்த்தி விட்டுச் செல்கிறார்கள்.

வானமும் பூமியும் எவ்வளவு விரிவானவை என்று சொல்கிறார்களா? வாழ்க்கை சுயேச்சைக்கும் உல்லாசத்திற்குமென நிர்மாணித்த மைதானமென்றா?

நம்பர் பதினைந்து, செங்கு ரெட்டித் தெருவின் ஒண்டுக் குடித்தன காடிகானவில், தங்கைக்கு டைப்ரைட்டிங் ஃபீஸ் கட்டி, தம்பிக்கு ஷூ வாங்கி, அக்காவின் சீமந்தத்துக்குப் பூ ஆர்டர் பண்ணி, அப்பாவுக்குச் சால்வை வாங்கி, அம்மாவுக்கு பிளட் டெஸ்ட் பண்ணி, அழகு கொஞ்சம் மங்கல் ஆகிவிடும் அபாயக் கட்டத்திற்குள் அவசர அவசரமாகத் தாலியைக் கட்டிக் கொண்டு, 'கெடைச்சதே பிராப்தம், பூர்வ ஜன்ம புண்ணிய பலம்' என்று ஜன்ம சாபல்ய முறுவதற்குப் பெயர் வாழ்க்கையல்லவென்றா?

'மிஸ்டர் சூர்யா நீங்கள் வந்த அன்னிக்கு என் மேக்கப் கொஞ்சம் ஹெவி! கொஞ்சம் சம்பிரதாய பூர்வமா அடக்கமா தோன்றப்

வையவன்

பலே நடந்துகிட்டேன். ரொம்ப தாமதமா யிடறதுக்கு முன்னாடி.. நெஜமான நிறங் களைப் பரிமாறிப்பமா? வேற வேற எதிர் பார்ப்புகள்ளாம் வந்து — அன்னிக்கு வந்த அந்த ஜெர்மன் சிற்பி பனிக்கட்டிலே ஒரு சிற்பம் செஞ்சு வச்சு, அது உருகி உருகி வழிஞ்சு வெறும்ன ஐஸா நிக்கறதை வேடிக்கை பார்த்தானே — அந்த மாதிரி ஓர் ஏமாற்றத்துக்கு ஆளாகாமே ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சிண்டா என்ன?'

'சூர்யாவுக்கு ஒரு போன் பண்ணுவமா?' என்று யோசித்தாள். சற்று தாமதித்து, ஃபோனை எடுத்து டயலைச் சுழற்றி னாள்.

இரண்டே நிமிஷத்தில் சூர்யா பேசி னான்.

''ஐ ஆம் சௌதாமினி ஹியர்!''

''தட்ஸ் நைஸ்! வாட் கேன் ஐ டூ ஃபர் யூ?''

— அவனும் பிஸினஸ் லைக்காகப் பேசி னான்!

அவள் குரலை மெதுவாய்ப் பவ்யமாக்கி னாள்.

''இன்னிக்குச் சாயந்திரம் நாம சந்திக்க முடியுமா?''

மறுமுனை மௌனமாயிற்று. ஏதோ ஒரு சரசரப்பு. காகிதம் புரட்டுவது போல்.

''ஒன் மினிட். நான் டைரியைப் பார்த் துச் சொல்றேனே.''

சௌதாமினி ஒரு புன்னகையை உதட் டினுள் புதைத்தாள். 'எனக்கு வேண்டும்!'

''ஓ எஸ்...! இன்னிக்கு ஈவினிங் எனக்கு ஒரு எங்கேஜ்மெண்டும் இல்லே. வி கேன் மீட்!'' நீ திருவல்லிக்கேணி டெர்மினஸ்ல தானே பஸ் ஏறுவே...?''

''ம்....''

''அங்க உன்னை வந்து 'பிக் அப்' பண்ணிக்கிறேன்.''

**தி**ருவல்லிக்கேணி டெர்மினஸில் அவன் அவளை நெடுநேரம் காக்க விடவில்லை. சரி யான சமயத்திற்கு ஸ்கூட்டரில் வந்தான்.

''எங்கே போவோம்...? ஒரு ஹோட்ட லுக்குப் போவோமா...?'' — அவன் கேட் டான்.

''ஹோட்டலா?'' அவள் முகம் சுளித் தாள்.

''சரி வேண்டாம்! எங்கேனு நீ சொல்லு.''

''லைட் ஹவுஸ் போவோமா?''

''சரி.''

''மேலே போக வாண்டாம். கிேழ, நியர் டு த ஷோர். மணல் ஈரமா இருக்குமில்லே. அங்கே சமுத்திரத்தைப் பார்த்துண்டு பேசுவோமே.''

அவன் அவளை விநோதமாகப் பார்த் தான்.

''என்ன பார்க்கறீங்க?''

''ஒண்ணுமில்லே... ஏறு.''

சௌதாமினி சொன்ன மாதிரி ஒரு கயிற் றுச் சுருணைக்குப் பக்கத்தில் உட்கார்ந்தனர்.

முதலில் சூர்யாதான் பேச ஆரம்பித்தான்.

''எங்க ஆபீஸர் பிரமோஷன் பார்ட்டிக் காக ஒனக்கு போன் பண்ணிட்டேன். ஐ'ம் ஸாரி.''

அவள் சுதாரித்தாள்.

''பரவால்லே'' என்று நிறுத்தி விட்டு சூர்யா முகத்தைப் பார்த்தாள்.

''என்ன பேசணும்னு நினைச்சுக் கூப் பிட்டே....'' என்று அவன் காயை நகர்த்தி னான்.

''நான் ஒங்களைச் சூர்யான்னே கூப்பிட லாமா?''

''ஓ எஸ்! பை ஆல் மீனஸ்.''

''நாளைக்கு அப்பா அழைப்பிதழை பிரஸ் ஸுக்குக் குடுக்கப் போறார்.''

அவன் நேராக அவள் கண்களுக்குள் பார்த்தான்.

''ஏன்... ஒனக்கு ஏதாவது ஆட்சேப ணையா?''

''இல்லே. நாளைக்குப் பத்திரிகை அச் சானவுடனே நாம கமிட் ஆயிடறோம். அப் புறமா வாழ்நாள் பூரா ஒருத்தருக்கொருத் தர் கட்டுப்பட்டிருக்க வேண்டியதுதான்!''

அவன் சன்னமான குரலில் குறுக்கிட் டான். ''கட்டுப்பாடு இல்லே; அனுசரணை.''

''இங்கிதமாச் சொல்றீங்க! விஷயம் அதேதானே!''

அவன் யோசிப்பது போல் கண்களை மூடினான். கடலை நேரிட்டுப் பார்த்தான் — சற்றுக் காத்திருந்து அவளே தொடர்ந்தாள்.

''ஸீ.. இப்ப இந்த சாயங்கால வெளிச் சத்திலே பாருங்க. இதான் நான். அன் னிக்கு மேக்கப் ஹெவி. அன்னிக்கு 'ராம நன்னு புரோவரா' பாடினேன். பட் ஐ ஆம் எ மாடர்ன் கேர்ள். ஐ லைக் பாப் மியூசிக். பிரேக் டான்ஸ். என்னிக்காவது ஒரு நா ஒரு பைலட் லைசென்ஸ் வாங்கி நாலு மணி நேரம் ஃபிளைட்ல நானே சொந்தமான பிளேன் ஓட்டணும்னு ஒரு ஆசை உண்டு. ஐ வான்ட் டு நோ ஹார்ஸ் ரைடிங். ஹிமா சல் பிரதேஷ்லயோ காஷ்மீரக் காடுகள் ளேயோ குதிரைல ஏறிண்டு மணிக்கணக் காய்ச் சுத்திண்டே இருக்கணும்னு தோண றது.''

அவன் வைத்த கண் வாங்காமல் எந்தச் சலனமுமின்றி அவளைப் பார்த்தான். அவள் தொடர்ந்தாள்.

''எங்க காலேஜ்ல நான்தான் பர்ஸ்ட்.

சங்கத் தலைவர்: நம்ம ரெண்டு பேரைத் தவிர இந்த மாசக் கூட்டத்துக்கு ஒருத்தரும் வரக் காணோமே...!

செயலாளர்: எதனாலே இருக்கும்...?

தலைவர்: 'இம்மாதக் கூட்டத்திற்கு வரும்போது இவ்வாண்டுக்கான சந்தாவை அவசியம் கொண்டு வரவும்'னு லெட்டர் எழுதித் தொலைச்சிங்கல்ல, அதான்...!

— எஸ். பாக்கி.

எல்லாத்திலயும். பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, பாட்டுப் போட்டி, டிபேட், விமன்ஸ் ஹாக்கி, ஹை ஜம்ப், லாங் ஜம்ப், ஸ்டார் ஆஃப் த காலேஜ் நான்தான்.''

''ஸ்வீட்... இட்ஸ் நைஸ்'' என்று மட்டும் சொன்னான் சூர்யா.

''விதி ஒரு பெரிய குடும்பத்திலே ஒரு சம்பாதிக்கப் போட வேண்டிய ஸ்திதியைத் தான் எனக்குக் கொடுத்தது. ஐ'ம் ஹாப்பி. ஏதோ ஒண்ணுமில்லேன்னு வருத்தப்படவிடாம ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்லே டெலிபோன் ஆபரேட்டர் ஆக்கியது. இத்தனை நாள் ஒரு நிஜுசா கடமைகளுக்காக வாழ்ந்தாயிடுத்து.

சூர்யாவுக்குப் புரிந்தது.

''உன்னுடைய சுதந்திரங்களிலே நான் குறுக்கிடுவேனோன்னு பயப்படறே... அதானே?''

''பயப்படலே! என்னை ஒங்களுக்கு அறிமுகப்படுத்திக்கறேன். உங்க இன்ட்ரஸ்ட் என்ன?''

''பெரிசா சொல்லிக்கறாப்ல ஒண்ணுமில்லே! அம்மா சாகறச்சே எனக்குப் பதினெண்ணு. நடுத் தம்பிக்கு ஒம்பது, சின்னத் தம்பிக்கு ஏழு வயசு. அப்பாவுக்கு வயசு நாற்பது. இளையாள் கொடுமை வரப்படாதுன்னு அவர் மறு கல்யாணம் பண்ணிக்கலே. ரயில்வேயிலே அவர் டிக்கெட் கலெக்டர். மாசத்திலே பாதி நாள் வெளியூர். மீதி நாள்ள டே டியூட்டி, நைட் டியூட்டின்னு ரெகுலரா வீட்டில் இருக்க மாட்டார்''

''சுண்டல் சுண்டல் தேங்கா மாங்கா பட்டாணி சுண்டேல்'' ஒரு பையன் குறுக்கிட்டான்.

சூர்யா பேச்சை நிறுத்தி அவனைப் பார்த்தான். ''ஒனக்குச் சுண்டல் பிடிக்குமா?'' என்று கேட்டான்.

''பிடிக்கும். இப்ப வேண்டாம்.''

''சரி வாங்கிக்கறேன். அப்புறமா சாப்பிடுவோம்.''

சில்லறையை வாங்கிக் கொண்டு பையன் போன பின்பு அவன் தொடர்ந்தான்.

''லோ. பொம்மனாட்டி இல்லாத வீடு. பெரிய்ய வீடு. அப்பா சம்பாரிச்ச மாம்பலத்திலே சுயமாக் கட்டினது. நான் தான் மூத்தவன். சமைக்கக் கத்துண்டேன். தம்பிகளுக்கும் கத்துக் கொடுத்தேன். வீட்டைப் பராமரிக்கக் கத்துண்டேன். யாரும் சொல்லித் தரலே—நானா எதிர் வீட்டிலே பக்கத்து வீட்டிலே பார்த்துப் பார்த்து ஊறுகாய் போடறதுலேர்ந்து டயத்துக்கு டயம் வீட்டுக்குச் சுண்ணாம்பு அடிக்கிற வரைக்கும்...

அப்பா ரிடயர் ஆனார். பராலிடிக் அட்டாக்! ஒன்னைப் பொண் பார்க்க வந்தவா சித்தியும் சித்தப்பாவும்தான்.'' சின்னத் தம்பி எம். டெக். எம். பி. ஏ. ஹானர்ஸ் டன்ல இருக்கான். பெரிய தம்பி இங்கே எம்.எஸ். பண்ணிட்டு ஆஸ்திரேலியாவுக்குப் போயிருக்கான். நியூரோ சர்ஜரில எக்ஸ்பர்ட். நான் இங்கே சாஸ்திரி பவன். பி.காம். அதுவும் கரஸ்பாண்டன்ஸ்'' என்று புன்னகையோடு நிறுத்தினான்.

அந்தப் புன்னகையில் எளிமையோ அல்லது இதான் வாய்ச்சுது என்ற பணிவோ இருந்தது.

ஆகாய ஊஞ்சலிலிருந்து தரையிறங்கிப் பாதாள வேர்களுக்குப் பயணமானது போல் சௌதாமினி உணர்ந்தாள்.

''ஒன்னோட அபிலாஷைகள் கனவுகள் இதையெல்லாம் எவ்வளவு நிறைவேத்த முடியும்னு நேக்கு சொல்லத் தெரியலே. யூ ஸீ.. வி கான்ட் க்யாரண்டி.''

அவள் ஒப்புக் கொண்டாற் போலத் தலையசைத்தாள்.

''ஒண்ணு மட்டும் நிச்சயம். உன் சுதந்திரத்துக்கு எங்க வீட்டிலே யாரும் குறுக்கிடமாட்டோம். அப்பா படுத்த படுக்கை. தம்பிகள் வெளிநாடு. மாமியார் நாத்தனார் கிடையாது! பொம்பிளை வாசனையடிச்சே இருபது வருஷமாகப் போறது எங்க வீட்டிலே. கிரஹ லட்சுமிம்பாளே! அந்த லட்சுமி இல்லே. வெறும் கிருஹம்தான் இருக்கு.''

அவன் சொன்ன விதத்தில் ஒரு பதம் அவளைத் தாக்கி அசைத்து விட்டது. அவள் கண்களில் நீர் பெருகிற்று.

''இது கூட ஒரு கண்டிஷன் இல்லே. நீ மாடர்ன் கேர்ளா இருந்துக்கலாம். ஆட்சேபணையில்லே. நீ எதுவா எப்படியிருந்தாலும் அதான் எங்க கிரகத்துக்கு லட்சுமி! புரியலே... லட்சுமி மாடர்னைஸ் ஆறத்துலே நேக்கு ஒரு ஆட்சேபணையுமில்லே. கடைசி வரை, முடியற வரைக்கும், ஐ மீன், நம்ம ரெண்டு பேர் வாழ்க்கையைச் சொல்றேன். நெலைக்கறது, நெலைக்கப் போறதுதான் உண்மை. ஏதோ மேக்கப்புன்னியே அது போட்டுண்டிருந்தா கலைஞ்சுடப் போறது—நெஜம்னா நிலைக்கப் போறது''.

அவன் மணலில் படாது டைரி மீது வைத்திருந்த சுண்டல் பொட்டலத்தைப் பிரித்து அவளிடம் நீட்டினான்.

கொஞ்சம் எடுத்து ஒவ்வொன்றாய் வாயில் போடும் போது ஹோட்டல் ஹார்ஷாவின் ரிசப்ஷன் ஹாலில் ஜெர்மன் சிற்பி செதுக்கி வைத்த பனிக்கட்டிச் சிற்பங்கள் நினைவு வந்தன. பனிஸ்தம்பம் மிஞ்சி இறுதியில் தண்ணீர் நிலைத்தது! இனி சூர்யாவிடம் பேச ஒன்றுமில்லை என்று சௌதாமினி நினைத்தாள்.



# அத்தியாயம் 14

## பறக்கும் குதிரை

நந்தினி ஒளி வீசிய அந்த வாளை எடுத்து ஆசையுடன் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். பிறகு முகத்துடன் சேர்த்து வைத்துக் கொண்டு தன் செவ்விதழ்களினால் முத்தமிட்டாள். ஒரு கணம் அக்கினிக் கொழுந்தைச் செந்தாமரை மலர் முத்தமிடுவது போலிருந்தது. அடுத்த கணத்தில் இரத்த வர்ண மேகம் பூரண சந்திரனைக் குறுக்கே நின்று தடுக்கப் பார்ப்பது போலிருந்தது. நந்தினியின் முகம் அப்போது காபாலிகர்கள் பூஜித்த இரத்த பலிகேட்கும் காளியின் கோர சௌந்தரிய முகம் போலாயிற்று. கத்தியை எடுத்து முன் போல் பக்கத்தில் வைத்ததும் அவளுடைய முகம் பழைய வசீகரத்தை அடைந்தது.

"ஆம்; தெய்வம் எனக்கு அளித்திருக்கும் சூசகம் இந்த வாள். ஆனால், அந்த சூசகத்தின் பொருள் இன்னதென்பதை நான் இன்னும் அறியவில்லை. இந்த வாளை நான் அடிக்கடி கொல்லன் உலைக்கு அனுப்பித் துரு நீக்கிப் பதப்படுத்திக் கூராக்கி வைத்துக்கொண்டு வருகிறேன். தாய்ப் புலி தான் பெற்ற குட்டிப் புலியைப் பாதுகாப்பது போல் இதை நான் பாதுகாத்து வருகிறேன். உரிய பிராயம் வருவதற்குள் புலிக்குட்டி நீளக் கொம்பு படைத்த காட்டு மாடுகளிடம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது அல்லவா? அராபிய நாட்டார் தங்கள் குதிரையை எவ்வளவு அன்புடன் பேணுகிறார்களோ, அப்படி இதை நான் பாதுகாத்து வருகிறேன். நோய்ப்பட்ட சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு வானமாதேவி பணிவிடை செய்வது போல் நானும் இந்த வாளுக்குச் செய்து வருகிறேன். இதைக் கொண்டு நான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெய்வம் இன்னும் எனக்கு அறிவிக்கவில்லை. மலர் மாலை தொடுத்துப் பழகிய இந்தக் கைகளினால் இந்த வாளை எந்தக் கொடியவனுடைய விஷ நெஞ்சத்திலாவது செலுத்த வேண்டுமென்பது தெய்வத்தின் ஆக்ஞையோ, அல்லது என்னுடைய மார்பில் என்னுடைய கையினாலேயே இதைச் செலுத்திக் குபுகுபுவென்று பெருகும் இரத்தத்தை ஆடை ஆபரணங்களால் அலங்கரித்த இந்த உடம்பில் பூசிக் கொண்டு நான் சாக வேண்டும் என்பது தெய்வத்தின் சித்தமோ, இன்னும் அது எனக்குத் தெரியவில்லை. இந்த வாளை எனக்கு அளித்திருக்கும் தெய்வம் சமயம் வரும்போது அதையும் எனக்குத் தெரியப்படுத்தும். அந்தச் சமயம் எப்போது வரும் என்று தெரியாதபடியால் இரவும் பகலும் எந்த நேரத்திலும் ஆயத்தமாயிருக்கிறேன். ஆம்; அழகிற்குப் பெயர்போன பழுவூர் இளையராணிக்கு ஆடை ஆபரண அலங்காரங்களில் மிக்க பிரியம் என்பது நாடறிந்த செய்தி. இரவு பகல் அறுபது நாழிகையும் நான் இந்த என் மேனியை அலங்கரித்து அழகுபடுத்தி வைத்துக் கொண்டிருந்தேன். பாவம்! பெரிய பழுவேட்டரையர் அவருக்காகவும் அவருடைய கௌரவத்தை முன்னிட்டும் நான் இப்படி சதா சர்வ காலமும் சர்வாலங்காரத்துடன் விளங்குவதாக நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறார்! என் நெஞ்சகத்தில் கொழுந்து விட்டெரியும் தீயை அவர் அறியார்!"

இதையெல்லாம் பிரமை பிடித்தவன் போலக் கேட்டுக் கொண்டிருந்த வல்லவரையன் சுய உணர்ச்சியை வருவித்துக் கொண்டு, "அம்மணி! பெரிய பழுவேட்டரையர் எங்கே?" என்று கேட்டான்.

"ஏன்? அந்தக் கிழவரைப் பார்ப்ப

அமரர் கல்கி

தற்கு உமக்குப் பயமாயிருக்கிறது?'' என்றாள் நந்தினி.

''இல்லை, அம்மணி! தங்களைப் பார்க்கவே நான் பயப்படவில்லையே! பழுவேட்டரையரிடம் எனக்கு என்ன பயம்?'' என்றான் வந்தியத்தேவன்.

''ஆகா! உம்மை எனக்குப் பிடித்திருப்பதின் காரணம் அதுதான். எதனாலோ என்னைக் கண்டு எல்லாரும் பயப்படுகிறார்கள். வீராதி வீரரும் எத்தனையோ போர்க்களங்களில் போரிட்டு உடம்பில் அறுபத்துநாலு புண் சுமந்தவருமான பெரிய பழுவேட்டரையர் என்னைக் கண்டு பயப்படுகிறார். சின்னப் பழுவேட்டரையர், — காலனையும் கதிகலங்க அடிக்கக் கூடிய காலாந்தக கண்டர், — என்னிடம் வரும் போது பயந்து நடுங்குகிறார். இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஏக சக்ராதிபதியாக ஆள விரும்பும் மதுராந்தகத் தேவர் என்னிடம் வரும்போது பயபக்தியுடன் வருகிறார். யமலோகத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் சுந்தர சோழச் சக்கரவர்த்திகூட நான் அருகில் சென்றால் நடுங்குகிறார். ஒவ்வொரு தடவை அவர் என்னைக் கண்டு மூர்ச்சையே அடைந்துவிடுகிறார். இன்




# பொன்னியின் செல்வன்

றைக்கு வந்தானே பார்த்திபேந்திர பல்லவன்? அவனுடைய அஞ்சா நெஞ்சத்தையும் வீரத்தைப் பற்றியும் வெகுவாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதித்த கரிகாலரின் உயிர்த் தோழர் என்றும் அறிந்திருக்கிறேன். ஆனால் என் அருகில் வந்த அரை நாழிகைக்கெல்லாம் அவன் எப்படி அடங்கி ஒடுங்கிப் போய்விட்டான்? ஆதித்த கரிகாலரிடம் உடனே போக வேண்டிய கடமையையும் மறந்து என்னைத் தொடர்ந்து வருகிறான். நான் காலால் இட்ட பணியைத் தலையால் நிறைவேற்றி வைக்க ஆயத்தமாயிருக்கிறான். அதே சமயத்தில் என்னருகில் நெருங்கும்போது அவன் நடுங்குகிறான். அதைப் பார்க்கும் போது எனக்கு ஒன்று நினைவுக்கு வருகிறது. சிறு குழந்தையாயிருந்த போது எரியும் நெருப்பைக் காண எனக்கு ஆசையாயிருக்கும். நெருப்பின் அருகில் செல்வேன். தீயின் கொழுந்தைத் தொடுவதற்கு ஆசையுடன் கைவிரலை நீட்டுவேன். ஆனால் அதற்குத் தைரியம் வராது. சட்டென்று விரலை எடுத்துக் கொண்டு விடுவேன். இம்மாதிரி எத்தனையோ தடவை செய்திருக்கிறேன். பார்த்திபேந்திரன் என் பக்கத்தில் நெருங்கி வருவதையும் பயந்து விலகுவதையும் பார்க்கும் போது அந்தப் பழைய ஞாபகம் எனக்கு வந்தது. பல்லவன் மட்டும் என்ன? நீர் யாருடைய தூதராக ஓலை எடுத்துக்கொண்டு காஞ்சியை விட்டுக் கிளம்பினீரோ, அந்த ஆதித்த கரிகாலரும் அப்படித்தான். நாங்கள் குழந்தைகளாயிருந்த நாளிலிருந்து அவருக்கு என் பேரில் அளவில்லாத வாஞ்சை; கூடவே ஒரு பயம். அதனால் என் வாழ்க்கை எப்படியெல்லாம் மாறிவிட்டது? ஐயா! உமது எஜமானரை நீர் மறுபடியும் சந்திக்கும் போது எனக்காக ஒரு செய்தி சொல்வீரா? 'சென்றதையெல்லாம் நான் மறந்துவிட்டேன். நான் இப்போது அவருக்குப் பாட்டி உறவு பூண்ட பழுவூர் ராணி. என்னைப் பார்ப்பதற்குச் சிறிதும் பயப்பட வேண்டாம். அவரை நான் கடித்துத் தின்று விழுங்கிவிட மாட்டேன்!' என்று சொல்லுவீரா?''

''தேவி! நான் உயிரோடு திரும்பிப்போய் ஆதித்தகரிகாலரைப் பார்ப்பேன் என்பது நிச்சயமில்லை. அப்படிப் பார்த்தால் அவரிடம் நான் சொல்லுவதற்கு எத்தனையோ செய்திகள் இருக்கின்றன. தங்களுடைய செய்தியைச் சொல்லுவதாக என்னால் உறுதி கூற முடியாது. தயவு செய்து மன்னிக்க வேணும்!''

''ஆம்; நான் பார்த்திருப்பவர்களுக்குள்ளே நீர் ஒருவர்தான் தைரியசாலி. மனத்தில் உள்ளதை ஒளியாமல் பேசுகிறவர். ஆகையால்தான் உம்மை எனக்குப் பிடித்திருக்கிறது. வாணர் குல வீரரே! நான் அதிகம் பேரைப் பார்ப்பது கிடையாது. பழையாறை இளையபிராட்டியைப் போல் ரதத்தில் ஏறிப் பிரயாணம் செய்வதில்லை. எங்கேயாவது போக வேண்டி நேர்ந்தால் மூடு பல்லக்கில் போகிறேன். எனக்கு யார் மூலமாகவாவது ஏதேனும் காரியம் ஆகவேண்டியிருந்தால் அவர்களை மட்டுந்தான் பார்க்கிறேன். அவர்கள் பெரும்பாலும் கோழைகளாயிருக்கிறார்கள். மனத்தில் உள்ளதைச் சொல்லுவதற்குத் துணிவதில்லை. நீர் மனத்தில் தோன்றுவதை ஒளிக்காமல் சொல்கிறீர்......''

''ஒளிப்பதில் பயனில்லை என்று நான் அறிந்திருக்கிறேன், ராணி! தங்களுடைய கண்கள் ஊடுருவிச் சென்று அறிய முடியாத இரகசியம் எந்த மனிதனுடைய நெஞ்சிலும் இருக்க முடியாது.''

''அது உண்மையாக இருக்கலாம். ஆனால் உம்முடைய நெஞ்சில் உள்ளதைத்தான் நான் இன்னும் அறிந்து கொள்ள முடியவில்லை. போனால் போகட்டும். பழுவேட்டரையரைப் பற்றிக் கேட்டீர். என் கணவரும் பார்த்திபேந்திரனும் பரிவாரங்களுடன் பக்கத்துக் கிராமத்துக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கே கண்ணகிக் கூத்தும் வேலனாட்டமும் நடைபெறுகின்றன. சின்ன இளவரசரைப் பற்றி வெறியாட்டக்காரனிடம் ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்ப்பதற்காகப் போயிருக்கிறார்கள், பைத்தியக்காரர்கள்! யாரைக் கேட்க வேண்டுமோ அவரைப் பிடித்துக்கேட்காமல் ஜோசியக்காரனிடம் சென்றிருக்கிறார்கள். திரும்பி வருவதற்கு

வெகு நேரம் ஆகும். ஆகையால்தான் உம்மை நான் அழைத்துவரச் செய்தேன். ஐயா! மறுபடியும் கேட்கிறேன். இளவரசரைப் பற்றிய உண்மை உமக்குத் தெரியும் அல்லவா? அதை நீர் எனக்குச் சொல்ல மாட்டீர் அல்லவா?''

''இல்லை, தேவி! சொல்லுவதற்கில்லை! இனிமேல் எந்தக் காரியத்திற்கும் புனைந்துரைப்பதில்லையென்றும், உண்மையே சொல்லுவதென்றும் இன்றைக்குத்தான் தீர்மானம் செய்து கொண்டேன். ஆகையால் இளவரசரைப் பற்றிச் சொல்ல முடியாது. சற்று முன்னால் கூட என் தீர்மானத்தை மறந்து விட்டேன். மன்னிக்க வேணும்!'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் தன்னுடைய இடைக் கச்சின் சுருளை அவிழ்த்து அதற்குள்ளேயிருந்த பனை இலச்சினை மோதிரத்தை எடுத்தான்.

''அம்மணி! இதோ தாங்கள் அளித்த பனை முத்திரை மோதிரம். இலங்கையில் பூதிவிக்கிரமகேசரியின் ஆட்கள் இதை என்னிடமிருந்து பலவந்தமாகக் கவர்ந்து கொண்டது உண்மைதான். ஆனால் சேநாதிபதி திருப்பிக் கொடுத்து விட்டார். இதோ தங்களிடம் சேர்ப்பித்து விடுகிறேன்; பெற்றுக் கொண்டு அருள்புரிய வேணும்!'' என்று கூறி முத்திரை மோதிரத்தை நீட்டினான்.

நந்தினி அதை உற்றுப் பார்த்துத் தான் கொடுத்த முத்திரை மோதிரம் அதுதான் என்றுதெரிந்துகொண்டாள்.

''ஐயா! நான் கொடுத்ததைத் திரும்பி வாங்கிக் கொள்ளும் வழக்கமில்லை. உம்முடைய உண்மையைச் சோதித்து அறிவதற்காகவே கேட்டேன். சோதனையில் நீர் தேறி விட்டீர். என்னுடைய ஆட்களைக் கொண்டு உம்மைச் சோதனை போடும்படியான அவசியத்தை எனக்கு ஏற்படுத்தவில்லை. மோதிரத்தை என்னுடைய ஞாபகத்துக்காக நீரே வைத்துக் கொள்ளலாம்!'' என்றாள்.

''அம்மணி! யோசித்துச் சொல்லுங்கள். இது என்னிடமிருந்தால் மீண்டும் அவசியம் நேரும் போது உபயோகப்படுத்த வேண்டியிருக்கும்......''

''அதைப் பற்றிக் கவலை இல்லை. எப்படி வேணுமானாலும் உபயோகப் படுத்திக் கொள்ளலாம். உம்மை இப்போது மறுபடியும் கண்ணைக் கட்டிப் பல்லக்கிலே ஏற்றிக் கொண்டு போகச் சொல்லப் போகிறேன். உம்மைப் பிடித்த இடத்திலேயே திரும்ப விட்டு விடுவார்கள்......''

''நான் அதற்கு மறுத்தால்?''

''இந்தப் பாழடைந்த அரண்மனையிலிருந்தும் கோட்டையிலிருந்தும் உம்மால் திரும்பிப் போக முடியாது. திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத்துக்குத்தான் வந்து கொண்டிருப்பீர்......''

''தேவி! இந்தக் கோட்டை? இந்தப் பாழடைந்த அரண்மனை?......''

''ஆம்; ஒரு காலத்தில் இந்தச் சோழ நாடு பல்லவர் ஆட்சியில் இருந்தது. வெகு காலம் இருந்தது. அப்போது பல்லவ சக்கரவர்த்திகள் இங்கே கோட்டையும் அரண்மனையும் கட்டியிருந்தார்கள். பிறகு சோழ நாடு பாண்டியர்கள் வசப்பட்டது. பாண்டிய மன்னர்கள் சில சமயம் இந்த அரண்மனையில் வசித்தார்கள். விஜயாலய சோழர் காலத்தில் இங்கே ஒரு பெரிய யுத்தம் நடந்தது. கோட்டை இடிந்து தகர்ந்தது. அரண்மனையிலும் பாதி அழிந்தது. மிச்சம் அழியாமலிருந்தபகுதியில்இப்போதுநாம்இருக்கிறோம். இந்தக் கோட்டையைச் சிலர் பல்லவராயன் கோட்டை என்றும் இன்னும் சிலர் பாண்டியராயன் கோட்டை என்றும் சொல்வார்கள். இரண்டிலும் உண்மை உண்டு. ஆனால் நன்றாக வழி தெரிந்தவர்களாலே தான் இதற்குள்ளே வந்துவிட்டு வெளியேற முடியும்! என்ன சொல்கிறீர்? என் ஆட்களை அழைத்துக் கொண்டு போய் விடச் சொல்லட்டுமா? அல்லது நீரே வழி கண்டுபிடித்து......''

''இல்லை, தேவி! வழி கண்டுபிடித்துச் செல்ல எனக்கு நேரமில்லை. என்னை அழைத்து வந்தவர்களே திரும்ப அழைத்துச் செல்லட்டும்.



ஆனால்...... நான் போவதற்கு முன்னால்...... என்னைத் தாங்கள் அழைத்து வரும்படி சொன்ன காரணம் வேறொன்றும் இல்லையா? நான் தங்களுக்குச் செய்யக் கூடிய உதவி வேறொன்றும் இல்லையா? அப்படி ஏதாவது இருந்தால், சொல்லுங்கள்!''

''நல்லது; நீர் கேட்கிறபடியால் சொல்கிறேன். பறக்கும் குதிரை ஒன்று எனக்கு வேண்டும். உம்மால் முடிந்தால் சம்பாதித்து வந்து கொடுக்கலாம்.''

''என்ன? பறக்கும் குதிரை என்றா சொன்னீர்கள்?''

''ஆம்; பறக்கும் குதிரைதான்!''

''பறப்பது போல் அதிவேகமாய் ஓடக்கூடிய அரபு நாட்டுக் குதிரையைச் சொல்கிறீர்களா?''

''இல்லை; இல்லை! என்றால் அத்தகைய குதிரைமேல் ஏறவே முடியாது. பூமியில் கால் வைத்து ஓடும் குதிரையை நான் சொல்லவில்லை. பறவைகளைப் போல் இறகுகளை விரித்து வானத்தில் பறந்து செல்லும் குதிரையைச் சொல்கிறேன். அம்மாதிரி அதிசயக் குதிரைகள் இந்தப் பூவுலகில் எங்கேயோ இருப்பதாகக் கதைகளில் கேட்டிருக்கிறேன். அத்தகைய இறகுள்ள பறக்கும் குதிரைதான் எனக்கு வேண்டும்!''

''எதற்காக? சொர்க்க லோகத்துக்குப் பறந்து போவதற்காகவா?''

''என்னைப் பார்த்தால் சொர்க்கத்துக்குப் போகக் கூடியவளாகத் தோன்றுகிறதா? அத்தகைய புண்ணியம் செய்தவள் அல்ல நான். கொடிய பாவங்கள் பல செய்தவள்.''

''சொர்க்கத்தில் உள்ளவர்கள் புண்ணியம் மட்டும்தானா செய்கிறார்கள்? அங்கேயும் பாவங்கள் செய்கிறார்கள். அதற்குப் பரிகாரம் தேடப் பூவுலகத்திற்கு வருகிறார்கள். வந்த காரியம் ஆனதும் சொர்க்கத்துக்குப் போகிறார்கள்.''

''இல்லை; எனக்குச் சொர்க்கத்துக்குப் போக விருப்பம் இல்லை. பாண்டிய நாட்டில் ஒரு பாலைவனம் இருக்கிறது. அதன் நடுவில் சில மொட்டைப் பாறைகள் இருக்கின்றன. புல் பூண்டு முளைக்காத பாறைகள். அவற்றில் சில முழைகள் இருக்கின்றன. ஒரு காலத்தில் அந்த முழைகளில் திகம்பர ஜைனர்கள் இருந்து தவம் செய்தார்கள். இப்போது பாம்புகளும் நரிகளும் அவற்றில் வசிக்கின்றன. தேவலோகத்து அமராவதி நகரைக் காட்டிலும் அந்தப் பாண்டிய நாட்டுப் பாலைவனப் பாறைகளே எனக்கு அதிகம் பிடித்தமானவை.''

''தேவி! தங்களுடைய ஆசை அதிசயமானதுதான்.''

''பறக்கும் குதிரை கிடைத்தால் நான் அந்தப் பாலைவனத்துக்குப் போவேன். பிறகு அங்கிருந்து இலங்கைத் தீவுக்குப் பறந்து செல்வேன். இலங்கையில் வானை முட்டும் மலைகளும் அம்மலைகளை மறைக்கும்படி உயர்ந்த மரங்கள் அடர்ந்த காடுகளும்

இருக்கின்றனவாம். இந்தச் சோழ நாட்டில் காணப்படும் எருமை மந்தைகளைப் போல் இலங்கைக் காடுகளில் யானை மந்தைகள் திரியுமாம். அவற்றையெல்லாம் பார்ப்பேன். இன்னும் இந்தப் பூவுலகத்தின் மத்தியில் உலகம் தோன்றின நாள் தொட்டுப் பனிக் கட்டியால் மூடப்பட்ட சிகரங்களையுடைய மலைகள் இருக்கின்றனவாம். சூரியன் உதயமாகும் சமயத்தில் அவை வெள்ளி மலைகளைப் போலஜொலிக்குமாம். பறக்கும் குதிரைமேல் ஏறிச் சென்று அம்மலைச் சிகரங்களைப் பார்க்க விரும்புகிறேன். இன்னும் அப்பால் பாண்டிய நாட்டுப் பாலைவனத்தைப் போல் பதினாயிரம் மடங்கு விஸ்தாரமான பாலைவனங்கள் ஒரே வெண்மணல் காடாக இருக்குமாம். பகல்வேளையில் அங்கே எரியும் தீயின் மத்தியில் இருப்பது போலவே தோன்றுமாம். அங்கேயெல்லாம் போக விரும்புகிறேன். இன்னும் அப்பால்போனால் கடுங்குளிர் காரணமாகக் கடல்நீர் உறைந்து கெட்டிப் பட்டு மனிதர்களும் மிருகங்களும் நடந்து போகும்படியிருக்குமாம். பறக்கும் குதிரைமேல் ஏறிச் சென்று அந்த இடங்களைப் பார்க்க விரும்புகிறேன்...''

''தேவி! என்னால் அத்தகைய பறக்கும் குதிரையைத் தங்களுக்குக் கொண்டு வந்து தர முடியாது. ஆனால் தாங்கள் கூறிய சில இடங்களுக்குப் போகச் சுலபமான வழி இருக்கிறது. ஒரு நல்ல படகிலே ஏறினால் அரை நாளில் இலங்கைக்குப் போகலாம். கப்பல் ஏறிச் சென்றால்......''

''ஐயா! அந்த வழி எனக்குத் தெரியாத வழி அல்ல. ஆனால் எனக்குக் கடலைக் கண்டால் பயம். கப்பலில் ஏறுவதென்றால் பயம். நதியைப் படகில் ஏறிக் கடக்கும் போது படகு அசைந்தால் கூடப் பயம். ஆகையால் உம்முடைய யோசனை எனக்குச் சிறிதும் பயன்படாது. நீர் போய் வரலாம்!'' என்று கூறி நந்தினி எழுந்தாள்.

''தேவி! வேறொன்றும் தாங்கள் என்னிடம் சொல்வதற்கு இல்லையா?''

''இல்லை! நீர் ஏதோ சொல்ல விரும்புவது போலக் காண்கிறது.''

''ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். அதற்கு மட்டும் விடை சொல்ல வேண்டும். சில நாளைக்கு முன்பு தாங்கள் இலங்கைக்கு வந்திருக்கவில்லையா? அநுராதபுரத்தின் வீதிகளில் இருண்ட நிழலில் தனியாக நின்றிருக்கவில்லையா?''

''இல்லவே இல்லை. பழுவேட்டரையரின் அரண்மனையையும் காவலையும் தாண்டி நான் ஒருபொழுதும் அப்பால் சென்றதே இல்லை. உமக்கு ஏன் அத்தகைய சந்தேகம் உதித்தது?''

''அம்மணி! இலங்கையில் சில தினங்களுக்கு முன்பு தங்களைப் பார்த்தேன். அல்லது தங்களைப் போன்ற மாய உருவம் ஒன்றைப் பார்த்தேன். 'பறக்கும் குதிரை' என்றெல்லாம் சொல்லுகிறீர்களே? ஒருவேளை உண்மையில் அத்தகைய குதிரை தங்களிடம் இருக்கிறதோ, அதில் ஏறி அங்கு வந்தீர்களோ என்று நினைத்தேன். ஆனால் இப்போது போல் ஆடை ஆபரணங்கள் புனைந்து அலங்காரமாக இருக்கவில்லை. சாதாரண சேலை ஒன்று உடுத்தி ஒருவித ஆபரணமும் புனையாமல் கூந்தலை விரித்துப் போட்டுக் கொண்டு நின்றீர்கள். அந்த ஸ்திரீ தாங்கள் அல்லவா?''

''இல்லை, நான் இல்லை, ஐயா! நீர் கூறும் அந்த ஸ்திரீ வாய் திறந்து ஏதாவது பேசினாளா?''

''இல்லை; ஜாடையினாலேதான் பேசினாள். ஆனால் தங்களுக்கு மந்திர



வாதிகளுடன் பழக்கம் இருக்கிறது. ஒருவேளை அத்தகைய மந்திர சக்தியினால் தங்களுடைய சூக்ஷ்ம வடிவம் அங்கே வந்திருக்கலாம் அல்லவா?''

''நானோ, என்னுடைய சூக்ஷ்ம சரீரமோ இல்லை என்றால்?...''

''தங்களை வடிவத்தில் மிகவும் ஒத்தவாய் பேச முடியாத ஊமை ஸ்திரீயாக அவள் இருக்க வேண்டும்.''

நந்தினியின் பார்வை எங்கேயோ வெகு தூரத்தில் சென்றிருந்தது. ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

''ஐயா! சற்று முன்னால் எனக்கு ஏதேனும் உதவி செய்ய விரும்புவதாகச் சொன்னீர் அல்லவா?''

''ஆம்!''

''அது தாங்கள் உண்மையாகச் சொன்ன வார்த்தைதானே?''

''சந்தேகமில்லை.''

''அப்படியானால் இதைக் கேளும். எப்போதாவது ஒரு சமயம் மறுபடியும் அந்த ஸ்திரீயைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது பிடித்துக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பியும். அது முடியாவிட்டால் என்னையாவது அவளிடம் அழைத்துக் கொண்டு செல்லும்!'' என்றாள் நந்தினி.



ரை நாழிகைக்கெல்லாம்வந்தியத்தேவன் மறுபடியும் முல்லையாற்றங் கரையில் நின்றான். அவனுடைய குதிரையும் பக்கத்தில் நின்றது. அவனை அங்கே அழைத்து வந்தவர்கள் ஒரு நொடியில் மறைந்து விட்டார்கள். தேவராளனைக் கூடக் காணவே இல்லை.

முல்லையாற்றங் கரையோரமாகக் குதிரையை மெதுவாகவே செலுத்திக் கொண்டு வந்தியத்தேவன் இரவெல்லாம் பிரயாணம் செய்தான். மூன்றாம் ஜாமத்தில் வால் நட்சத்திரம் அதன் பூரண வளர்ச்சியை அடைந்து வானத்தில் ஒரு நெடிய பகுதியை அடைத்துக் கொண்டு காணப்பட்டது. மக்கள் உள்ளத்தில் பீதியை விளைவித்த அந்தத் தூமகேதுவின் காரணமாக உண்மையிலேயே ஏதேனும் விபரீதம் ஏற்படப் போகிறதா அல்லது இதெல்லாம் வெறும் குருட்டு நம்பிக்கைதானா என்று அடிக்கடி அவன் சிந்தனை செய்தான். நந்தினியின் நினைவும் இடையிடையே வந்து கொண்டிருந்தது. அவள் கூறிய வார்த்தைகள் எல்லாம் அவன் மனத்தில் நன்கு பதிந்திருந்தன. முதல் தடவை தஞ்சை அரண்மனையில் அவளைப் பார்த்தபோது ஏற்பட்ட அருவருப்பு உணர்ச்சி இப்போது மறைந்து விட்டது. ஏதோ பயங்கரமான துன்பங்களில் அடிபட்டவள் இவள் என்ற எண்ணத்தினால் ஒருவித அனுதாபமே உண்டாகியிருந்தது. ஆயினும் அவளுடைய நோக்கம் என்ன, அவள் செய்ய விரும்பும்காரியம்என்ன,அவளுடைய உண்மையான வாழ்க்கை வரலாறுஎன்ன, என்பவை மர்மமாக இருந்தபடியால் ஒரு பக்கத்தில் கோபமும் இருந்தது. ஒப்பில்லாத சௌந்தரியத்தோடு ஏதோ ஒருவித மாயா சக்தி உடையவள் அவள் என்றும் தோன்றியது. ஆதலின் அவளுடன் இனி எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளாமலிருப்பதே நல்லது. பனை இலச்சினை உள்ள மோதிரத்தை அவள் திரும்பி வாங்கிக் கொண்டிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும். அதை வாங்கிக்கொள்ள மறுத்துவிட்டாளே? நதியிலே எறிந்து விடலாம் என்றால், அதற்கும் மனம் வரவில்லை. இந்த அபாயகரமான காலத்தில் அது மீண்டும் சமயத்துக்கு உபயோகப்படலாம். எதற்காக எறிய வேண்டும்?

பழையாறைக்குச் சென்று இளைய பிராட்டியைப் பார்த்துச் சொல்ல வேண்டியசெய்தியையும்சொல்லிவிட்டால், அப்புறம் அதை எறிந்தே விடலாம். இம்மாதிரி தொல்லையான காரியங்களில் பின்னர் பிரவேசிக்கவே கூடாது.

இரவு நாலாம் ஜாமத்தில் கிழக்குத் திசையில் வெள்ளி முளைத்தது. சுக்கிரனை எதிரிட்டுக் கொண்டு போகக் கூடாது என்று வந்தியத்தேவன் கேள்விப்பட்டிருந்தான். குதிரையை நிறுத்தி ஒரு மரத்தில் கட்டிவிட்டுத் தானும் தரையில் படுத்துச் சிறிது உறங்கினான்.

(தொடரும்)

புதிய

# ஸெரிலாக் ஆரஞ்சு




## உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலம் அளிக்க இன்னுமோர் வழி

இதோ உங்கள் குழந்தைக்கு இன்னுமோர் அனுகூலம்-புதிய ஸெரிலாக் ஆரஞ்சு. வளரும் ருசிக்கேற்ப உணவில் ஒரு மாறுதல் அளிப்பதோடு, அவனுக்கு ஆரஞ்சின் நன்மைகளையும் தருகிறது. நீங்கள் ஸெரிலாக் ஆரஞ்சு கொடுக்கும் பொழுது குழந்தைக்கு முழுமையான போஷாக்கு, நற்சுவை மற்றும் நொடிப் பொழுதில் தயாரிக்கும் வசதி ஆகிய எல்லா ஸெரிலாக் அனுகூலங்களும் தொடர்ந்து கிடைக்கின்றன. நான்கு மாதங்களிலிருந்து பால் உணவுடன் கூட ஸெரிலாக்-வீட் கொடுக்க ஆரம்பியுங்கள். ஆறு மாதங்களிலிருந்து ஸெரிலாக் ஆப்பிள்/புதிய ஸெரிலாக்-ஆரஞ்சு கொடுங்கள். மூன்று இனிய வழிகளில் ஸெரிலாக் அனுகூலத்தை உங்கள் குழந்தைக்கு அளியுங்கள்

*சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*







R K SWAMY/FSL/4974-TAM

# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ




உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை

## சக்கரா டீ



**டாட்டா டீ லிமிடெட்**

உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM



# ஏது இந்தராகம்...?

**வே**ணுகோபாலன் ஆட்டோ டிரைவருக்குப் பணம் தந்து அனுப்பி விட்டு, அந்தப் பெரிய வீட்டின் கேட்டைத் தொட்டார்.

நாயோ, கூர்க்காவோ இருப்பதாகத் தெரியவில்லை.

உள்ளே நுழைந்து ஹாலுக்கு வந்து உட்கார்ந்தார்.

"வணக்கம். நீங்கதான் சபா செக்ரட்டரியா?" — எதிர்கொண்டு விசாரித்தவள் வேலைக்காரப் பெண்மணியாக இருக்க வேண்டும்.

"ஆமாம். சாந்தா இருக்காங்களா?"

"இப்பதான் ரெகார்டிங் முடிச்சிட்டு வந்தாங்க. சாப்பிட்டுக்கிட்டு இருக்காங்க. பத்து நிமிஷத்திலே வந்துடுவாங்க.... நீங்க என்ன சாப்பிடறீங்க?"

"எதுவும் வேண்டாம்மா."

"அம்மா ஏதாவது கொடுக்கச் சொல்லியிருக்காங்க!"

"அப்போ கூடா காப்பியோ, டீயோ கொண்டு வா."

அவள் உள்ளே போனாள்.

அவர் அந்த அறையைச் சுற்றிக் கண்களைச் சுழற்றினார்...

கண்ணாடித் தடுப்புக்குப் பின்னால் திரைப்படங்களின் பெயரெழுதிய கேடயங்கள். சில புகைப்படங்கள். சமீபத்துப் புகைப்படத்தில் சாந்தா உடம்பு பூசியது போல் இருந்தாள்.

அவர் சமீபத்தில் அவளைச் சந்திக்கவேயில்லை.

கடைசியாக மைலாப்பூர் ஒண்டுக் குடித்தனத்தில் பார்த்ததுதான்! இன்று போலவே அப்பொழுதும் சாந்தாவிடம் வித்வத் இருந்தது. அந்த ஏழை சாந்தாவின் குரலில் இழைந்த கீர்த்தனைகள் இவள் தியாகப் பிரம்மத்தின் வம்சா வழியோ என்று வியக்க வைத்தன.

பாவம், வாழ்க்கையில் அவள் நிறைய சிரமப்பட்டாள்!

சாந்தாவின் அம்மா அம்புஜம் ஈளையும் இருமலுமாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். அம்மாவின் வைத்தியச் செலவுக்கும் தங்கள் வயிற்றுப் பாட்டுக்காகவும் சாந்தா போராடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் சங்கீத ஞானம் விலை போகவில்லை.

வேணுகோபாலன் அவள் திறனறிந்தவர் என்பதால் சபாவில் அவளுக்கு வாய்ப்புத் தந்து உதவ விரும்பினார்.

அதற்காக அவளைப் பார்க்கப் போயிருந்தார். சாந்தாவின் போர்ஷனில் அடுக்களையைத் தவிர ஒரே ஓர் அறைதான்! அங்கே உட்கார்ந்து வேணுகோபாலனும் சாந்தாவும் பேசிக் கொண்டிருந்தார்கள். சற்றுத் தள்ளி, கட்டிலிலிருந்த அம்மா இருமிக் கொண்டிருந்தாள்.

"ஏம்மா சாந்தா, உங்கம்மாவுக்கு ஏதாவது வைத்தியம் பார்த்தியா?"

"டாக்டர்கிட்ட காட்டிட்டு வந்தேன், சார். அவர் ஃபீஸைக் கூட எப்படியோ மேனேஜ் பண்ணிடறேன். எழுதிக் கொடுக்கிற மருந்துகளை வாங்கத்தான் முடியலே. பாட்டு ட்யூஷன்லே வந்த வருமானம் சாப்பாட்டுச் செலவுக்கும் வீட்டு வாடகைக்குமே போதலே.

எஸ்.குமார்

எங்கேயாவதுவேலைக்குப்போகலாம்னாலும் சிபாரிசு பண்ண மனுஷங்க இல்லை. நாலு கச்சேரி சான்ஸ் கிடைச்சாலாவது செலவைச் சமாளிக்கலாம். அதுக்கும் நான் இன்னும் பிரபலம் ஆகலே.

''வருத்தப்படாதேம்மா. கலைஞர்களின் நிலைமையே அப்படித்தான்! பிரபலமாகாத திறமைசாலிகளை யாரும் ஆதரிக்க மாட்டாங்க. பிரபலமாயிட்ட பிறகு திறமை மங்கிப் போனாலும் விட மாட்டாங்க. நீ கவலைப்படாதேம்மா! எனக்கு உன்னோட திறமை தெரியும். நான் எங்க சபாவில உனக்கு சான்ஸ் வாங்கித் தர்றேன். இது அட்வான்ஸ்.''

கைப்பையின் ஜிப்பை இழுத்து, பணத்தை எடுத்து எண்ணினார். ஐந்நூறு ரூபாயை அவளிடம் நீட்டினார்.

''கச்சேரி முடிந்ததும் ஆயிரத்து ஐந்நூறு ரூபா தர்றேன். சரிதானே?'' என்றார்.

உட்கார்ந்திருந்தவள் எழுந்து கொண்டாள்.

''சார்... ரொம்ப நன்றி, சார்... நான் இதுக்கெல்லாம் என்ன கைம்மாறு செய்யப் போறேன்னே புரியலே!''

''என்னம்மா இது...துன்பத்திலே உதவுறது மனுஷதர்மம்மா. இதுக்காக ஏன் பெரிய வார்த்தையெல்லாம் பேசறே!''

**வே**லைக்காரப் பெண் கையில் தம்ளருடன் ஹாலுக்கு வந்தாள்.

''இந்தாங்க சார்.''

வாங்கிக் கொண்டார்.

''இதோ அம்மா வந்துடுவாங்க'' என்று அவன் மறைந்து போனான்.

சாந்தாவுக்கு ஐந்நூறு ரூபாய் அட்வான்ஸ் கொடுத்து அவளிடம் தேதி வாங்கியிருப்பதைச் சபா கூட்டத்தில் சொன்ன போது பலத்த சலசலப்பு ஏற்பட்டது.

''ஏதாவது லைட்மியூசிக்னு கூடப் பரவாயில்லே. கேட் கலெக்ஷன் நல்லாயிருக்கும். நாடகத்தால் வர்ற நஷ்டத்தை சரிகட்டலாம்.''

''கர்நாடக சங்கீதத்தை எத்தனை பேர் ரசிப்பாங்க?''

''அப்ப கூட... பாடப் போறது யாரு... யாரோ சாந்தாவாம். ஊர் பேர் தெரியாதவங்க பாட்டுக்கு ரெண்டாயிரமா?''

மனம் நொந்து போனார் வேணுகோபாலன்.

அதற்குப் பிறகு உள்ளூரில் இருந்தும் அவளைப் போய்ப் பார்க்கவில்லை. கடிதம் மூலமாகவே 'இப்பொழுது சபாவில் நிறைய நிகழ்ச்சிகள் இருக்கின்றன. பிறகு உன்னைச் சந்தித்து வேறு தேதி வாங்கிக் கொள்கிறேன்' என்று எழுதிப் போட்டார்.

இந்த ஒரு வருஷ இடைவெளியில் சாந்தா மிகவும் பிரபலமாகிவிட்டாள். அது சினிமா என்னும் அலாவுதீன் பூதத்தின் சாதனை! பட்டி தொட்டிகளிலெல்லாம் அவள் பாடல்கள் ஒலிக்கின்றன.

''ஏன் சார், சாந்தாவுக்கு நம்ம சபாவிலே கொடுத்த அட்வான்ஸைத் திருப்பி வாங்கலே, இல்லே?''

''இப்ப தேதி வாங்க முடியுமா?''

''என்ன குரல் வளம், சார்!''

— அதே சபா உறுப்பினர்கள் பிளேட்டைத் திருப்பி விட்டார்கள். அதனால்தான் அவர் இங்கே வந்து உட்கார வேண்டியதாயிற்று.

''வணக்கம் சார்!''

**த**ழைய பட்டுப் புடைவை கட்டி, தலை நிறைய பூ வைத்து, மஞ்சள் பொலியும் முகத்துடன் சாந்தா.

''வணக்கம்மா'' என்று எழுந்து கொண்டார்.

''நீங்க உட்காருங்க சார்... நீங்க என்னிக்கும் என் நன்றிக்கும் மரியாதைக்கும் உரியவர். நான் வயசிலயும் சின்னவ. உட்காருங்க.''

உட்கார்ந்து கொண்டார். அவளும் எதிரே உட்கார்ந்தாள். ''ஃபோன்ல நீங்க வர்றதாகச் சொன்ன போது ரொம்ப சந்தோஷப்பட்டேன். உங்களைப் பார்த்துப் பல மாசங்களாயிடுச்சே!''

''கிட்டத்தட்ட ஒரு வருஷமாயிடுச்சும்மா.''

''ஏதாவது விசேஷம் உண்டா?''

''ஒண்ணுமில்லே... சபாவிலே எல்லாரும் உங்ககிட்டே தேதி வாங்க முடியுமான்னு கேட்டாங்க...''

''ஏற்கெனவே நீங்க ஆபத்திலே உதவின அட்வான்ஸ் வேறே இருக்கு. நிச்சயமா தேதி தர்றேன். லைட் மியூசிக்தானே?''

''இல்லேம்மா, கர்னாடிக் நடத்தணும்னு எனக்குப் பிரியம்.''

''என்னை மன்னிச்சுடுங்க, சார். நான் கர்நாடகக் கச்சேரி பண்றதில்லை.''

''என்னம்மா இது... அதுதானேம்மா உனக்கு ஆதாரம்!''

''ஆமாம், அதுதான் ஆதாரம்! ஆனா, இப்ப நான் அதிலேருந்து விலகிப் போயிட்டேன். என்னோட குறுகிய காலப் புகழுக்குக் காரணம் என்னோட சங்கீத லயங்களில்லை, வெறும் சப்தங்கள். அதனாலே லைட் மியூசிக்கைத் தவிர வேறே கச்சேரிகள் பண்றதில்லேன்னு முடிவு பண்ணிட்டேன்.''

''பிழைப்புக்காக ஏதோ ஒண்ணைச் சார்ந்திருக்க நேர்ந்தாலும் ஆத்மார்த்தமான ஈடுபாடு இன்னொண்ணில இருக்குமில்லையா?''

''இருக்கு. என் பூஜை ரூமுக்குள்ளே மட்டும்!''

''இதோ பாரும்மா, உன்னுடை லைட் மியூசிக்னாகூட எங்க சபாவிலே எல்லாரும் வரவேற்பாங்க. ஆனால் எனக்கு அதிலே திருப்தி இருக்காதும்மா.''

''சார், தயவு செய்து என்னை மன்னிச்சுடுங்க. நான் பாரம்பரிய சங்கீதத்தைப் பாட வந்தாலும் அங்கே வேறே எதிர்பார்ப்புகள் இருக்கும். ரசிகர்கள் அந்த நேரம் நான் என்ன பாடறேன்கிறதுல மனசைச் செலுத்தாம, துண்டுச் சீட்டில் 'நேயர் விருப்பம்' எழுதிக்கிட்டிருப்பாங்க. என் முடிவை நான் மாத்திக்கப் போறதில்லை'' — சொன்ன போது சாந்தாவின் குரல் இலேசாக நடுங்கியது.

மேற்கொண்டு என்ன பேசுவதென்று புரியாமல் வேணுகோபால் வியர்த்துக் கொண்டிருந்தார்.

---

## அருள்வாக்கு

**ப**ணத்துக்காகப் பகவானைப் பிரார்த்தனை பண்ணுவது தப்புத்தான். கஷ்டம் போகணும், வியாதி தீரணும் என்று பிரார்த்தனை பண்ணுவது கூட அவிவேகம்தான். பகவானுக்காகவே பகவான் என்ற ப்ரேமையோடு செய்கிற பக்திதான் நிஜமான பக்தி. ஆனால் பகவானோ (கீதையில்) இப்படிப் பணத்துக்காகவும்கஷ்ட நிவிருத்திக்காகவும்பிரார்த்திக்கிறவர்களைக் கூட உயர்ந்தவர்கள் (''உதாரா:'') என்கிறார். ஏன் அப்படிச் சொல்கிறாரென்றால் பிரார்த்தனை செய்வது, எதுவோ ஒன்றுக்காக பகவான் என்று ஒருத்தனை நினைப்பது, நம்மால் முடியாத ஒன்றைச் செய்கிற மகாசக்தன் அவன் என்பதால் அவனிடம் வேண்டிக் கொள்வது (இதிலேயே நம் வேண்டுதலை நிறைவேற்றிவைக்கும் அருள் மனஸ் அவனுக்கு உண்டு என்ற நம்பிக்கையும் இருக்கிறது) — இப்படி அநேக நல்ல விஷயங்கள் பணத்துக்காகவும், கஷ்ட நிவிருத்திக்காகவும் பிரார்த்திப்பதில் கூட இருக்கத்தானே செய்கின்றன? அதனால்தான் இப்படி பிரார்த்திப்பவர்களையும் உசந்தவர்களாகச் சொன்னார். ''ஏதோ ஒரு தினுசில் என்னிடம் வந்துவிட்டால் போதும். அப்புறம் ஸரியான தினுசில் வரும்படியான பக்குவத்தை அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தந்துவிடலாம்'' என்று நினைத்துத்தான் அப்படிச் சொன்னார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.








வண்ணப்படம்: சியோல் ஒலிம்பிக் சின்னங்களும் பிரதான ஸ்டேடியங்களில் ஒன்றும்.

# கல்கி

# விடுமுறை மலர்

# 1988

வண்ணங்களில் —

* எஸ். பி. பாலசுப்பிரமணியம்: சௌராஸியா
* ஆழ்கடல் அற்புதங்கள்
* கார்த்திக்; மீனாட்சி சேஷாத்திரி
* வைஷ்ணவி தேவி யாத்திரை.
* ரமேஷ் கிருஷ்ணன்; கீத் சேத்தி
* நாகாலாந்து காட்சிகள்.
* அலெக்ஸாந்தர்; மூப்பனார்
* குடை விரிக்கலாம்; காற்றில் மிதக்கலாம்!
* பி. ஸி. சொர்க்காரின் மந்திர ஜாலம்
* திருவிடைக்கழி முருகன்; தெய்வயானை.
* செல்லப்பன் — அரஸ்: நகைச்சுவை ஓவியங்கள்
* டிஸ்னிலாந்து
* கோகுலம் பக்கங்கள்
* இயற்கைக் காட்சிகள்
* மற்றும் ஏராள உள்நாட்டு அயல்நாட்டுப் பயணக் கட்டுரைகள்; சிறுகதைகள்: இரண்டு நாவல்கள்; சியோல் ஒலிம்பிக்ஸ் விவரங்கள்!

**320 பக்கங்கள் : : விலை ரூ. 10/—.**

* ஜூன் முதல் வாரத்தில் கிடைக்கும்.

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது பதிவுத் தபாலில் பெற ரூ. 15 அனுப்பவும்.

**மானேஜர், கல்கி, சென்னை—600 032.**



விவரமறிந்தோர் நாடுவது

**ஆஸ்ப்ரோ ஆறுதல்**





அதி உன்னதமான
தலைவலி
நிவாரணி

உலகெங்கும் பல லட்சம் பேரின் நம்பிக்கை மருந்து

**தடையற்ற தண்ணீர் கிடைக்க**




A Product of
**DLF UNIVERSAL LIMITED**
American Universal Division
6, அவின்யூ ரோடு
நுங்கம்பாக்கம்,
சென்னை -34
போன் : 477942

## இவர்தான் முதல்வர்:

மறைந்த முதல்வர் எம்.ஜி.ஆர். அவர்களுக்குப் பின், முதல்வர் பொறுப்பை ஏற்ற ஜானகி எம்.ஜி.ஆர்., மறைந்த முதல்வர் கொள்கைகளைப் பின்பற்றுவதாகவும், ஏழை எளிய மக்களுக்கான சமுதாயப் பணி இன்னும் சிறப்பாக அமையச் செயல்படுவதாகவும் உறுதி கூறினார்.

மைய அரசுடன் நல்லுறவு நிகழ, பிரதமரைச் சந்தித்துத் தம் கணவர் மைய அரசுடன் கொண்டிருந்த நல்லுறவைத் தம் தலைமையில் அமைந்துள்ள அரசும் தொடர்ந்து கடைப்பிடிக்கும் என்றும், மைய அரசுப் தமது அரசுக்கு ஆதரவை முழுமையாகத் தர வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார். பிரதமரும் முழுமையான ஆதரவு தருவதாக உறுதி அளித்தார்.

ஆனால் அன்னை ஜானகி எம்.ஜி.ஆர். அமைச்சரவையை இருபத்தி மூன்று நாட்களில் காங்கிரசும், செல்வி ஜெயலலிதா அணியினரும் கவிழ்த்து விட்டுக் குறுக்கு வழியில் அமைச்சரவை அமைக்க முயன்றது நாடறிந்த உண்மை.

அமைச்சரவை கலைக்கப்பட்ட பின், ஜானகி எம்.ஜி.ஆர்., பாரதப் பிரதமரையோ, காங்கிரஸ் தலைவர்களையோ ஏசவில்லை; ஒரு வசைமொழி கூடக் கூறவில்லை. தம் கட்சியினர் பிரதமரைக் குறை கூறிக் கோபமாய்ப் பேசியதைக் கூட, வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். பிரதமரை நம்பிப் பெரும் ஏமாற்றத்திற்கு உள்ளாகியிருந்த போதும் கூடப் பெருந்தன்மையாக நடந்து கொண்டார்.

ஜெயலலிதாவுடன் சேர்ந்து தம் ஆட்சியைக் கலைக்க உதவியாக இருந்த கருப்பையா மூப்பனார், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பதவி ஏற்றுக் கொண்டதும், அவருக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பி அரசியலிலே ஒரு நாகரிகத்தை ஏற்படுத்தினார். அதேபோன்று சமீபத்தில் நடந்த பந்தில் சிறையில் மாண்ட தி.மு.க. தொண்டனுக்குத் தம் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டார்.

அ.இ.அ.தி.மு.க. இரண்டு அணியாகப் பிரிய, அவற்றுள் ஒன்றுக்குத் தாமே தலைவி என்று பொறுப்பு ஏற்றுக் கொண்ட ஜெயலலிதா, வயதில் முதிர்ந்தவர் என்றுகூடப் பாராமல், ''ஏ ஜானகி! மரியாதையாக அரசியலை விட்டு விலகிக் கொள்! உன்னை எச்சரிக்கிறேன்!' என்று தரம் தாழ்ந்து பேசினார். இக் கொடுஞ் செயலுக்குக் கூட தெய்வத்தாய் மறுமொழி எதுவும் கூறவில்லை. மாறாகத் தம் கட்சிக்காரர்களை, 'அந்த அம்மாவைப் பற்றி எதுவும் தரம் தாழ்த்திப் பேசாதீர்கள்' என்று கேட்டுக் கொண்டார்.

ஆரம்பத்தில் அன்னையாரைப் புரிந்து கொள்ளாத பத்திரிகையாளர்கள், இப்பொழுது அவர்களின் நிதானம், எல்லோரிடமும் எளிமையாகப் பழகும் தன்மை, பத்திரிகைக்குப் பேட்டி அளிக்கும் போது சொந்தமாகப் பேட்டியளிப்பது, தினமும் ஆயிரக்கணக்கான பொது மக்களைச் சந்திப்பது, எந்தக் கேள்விக்கும் தெளிவான, அறிவு முதிர்ந்த பதிலைத் தருவது போன்ற குணங்களையும், திறமைகளையும் கண்டு வியக்கின்றனர். ஆடம்பரத்தைச் சிறிதும் விரும்பாமல் எளிமையாக உள்ளார் ஜானகி எம்.ஜி.ஆர்.

13.3.88 காலை 9.30 மணிக்குத் தோட்டத்தில் அன்னையாரை நேரில் சந்தித்தேன். அப்போது அங்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான ஏழை, எளிய ஆண்கள், பெண்கள் குழந்தைகள் மத்தியில் அவர் நேரடியாகப் பேசியவிதமும், காட்டிய பாசமும் பரிவும் என்னை மெய்சிலிர்க்க வைத்தன. 'தெளிந்த நீரோடை போன்ற தூய உள்ளம் கொண்ட இந்தத் தெய்வத்தாய், தமிழகத்தின் அடுத்த முதல்வராக வரவேண்டும்' என்று அந்தக் கணமே நினைத்தேன். என்னைப் போன்றே லட்சக்கணக்கான தொண்டர்களும் விரும்புகிறார்கள்.



# எதிரிக்கும் நன்மை எண்ணும் ஜானகி!

— பழனியப்பன், திருநெல்வேலி.

# ஓர் வேண்டுகோள்

சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் காட்டாங்கொளத்தூர் செங்கற்பட்டு மாவட்டத்தில் மறைமலை நகரிலுள்ள சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளுக்கும், நிராகரிக்கப்பட்ட முதியோர்களுக்கும், உண்ண உணவும், உடையும், மேலும் பாதுகாப்பும் அளித்து சமுதாயத்தில் அரியதொரு பணியை ஆற்றிக் கொண்டு வருகிறோம். இப்பணிக்கு பல பொது மக்களின் நல்லாசியும், பொருளுதவியும், பணமாகவோ அல்லது பொருளாகவோ கொடுப்பதன் மூலமாக சுமார் 30 ஆண்டுகளாக பல ஆயிரக்கணக்கானோர் வாழ்க்கையில் பல நல்ல நிலைக்கு வந்து தேசத்திற்கு பயனுள்ள குடிமகனாக வாழ்ந்துள்ளார்கள்.

இக்கல்வி ஆண்டில், ஆதரவற்ற குழந்தைகளுக்கு சீருடை, கல்வி சாதனங்கள் மேலும் அன்றாட வாழ்வில் வாழ்ந்திட தேவையான பொருட்கள் தேவைப்படுகிறது. எனவே இப்பத்திரிக்கையை படிக்கும் அன்பர்கள் மனமுவந்து தாராளமாக உதவிச் செய்யுமாறு குழந்தைகளின் சார்பாக அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மனமுடையோர் ஆசிரமத்தின் வளர்ச்சிக்காக நிலமாகவோ அல்லது வீடாகவோ தானம் செய்து அதில் கிடைக்கும் வருவாயில் குழந்தைகளின் வளர்ச்சிக்கு பயன்படுத்தலாம். ஒரு குறிப்பிட்ட தொகையினை கொடுத்தால் அத்தொகையினை பொதுநிதியில் வைத்து அதில் கிடைக்கும் வட்டியை வைத்துக் கொண்டு தீபாவளி, பொங்கல் மற்றும் குழந்தைகளுக்கு விருந்தும் அளிக்கலாம்.

தாங்கள் பிறந்த நாளையோ, திருமண நாளையோ அல்லது தங்களது பெற்றோரின் நினைவு நாளையோ, ஆதரவற்ற குழந்தைகளுக்கு விருந்தளித்து ஆத்ம திருப்தி பெற்று, இறைவனின் நல்லாசி பெறுவீர்களாக! மேற்கண்ட விவரங்களுக்கு அணுக வேண்டிய முகவரி:

**நிர்வாகி,**
**சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்,**
**நெ. 20, கம்பர் தெரு,**
**கிழக்கு தாம்பரம்,**
**சென்னை - 600 059.**
**தொலைபேசி எண்கள்: 401078 & 402354**

# கம்பீரம்

**மும்தாஜ் யாசீன்**

"அல்லாவே....'' எனச் சரிந்து உட்காரத்தான் முடிந்தது ஸல்மா வுக்கு.

அவளால் இனி ஆகப் போவது ஒன்றும் இல்லே.

எல்லாமே எல்லே தாண்டிப் போய் விட்டன.

முந்நூறு ரூபாய் காகக்கூச் சந்தி சிரித்தாயிற்று. ஓர் அன்னியன் இவர் களை வாய்க்கு வந்தபடி பேசி விட் டான்.

இனி என்ன மிச்சம் — அத்தா வின் கோபத்தைத் தவிர?

அவரைப் பற்றிய பயம்தான் அடி வயிற்றை இழுத்துப் பிடித்தது.





''அடடே, வீட்டு வாசலில் டூரிஸ்ட் கார் ரெடியா நிற்குது. கட்டு சாதம் கட்டி, மூட்டை முடிச்சுகள் தயார்! எந்த ஊருக்கு சார் டூர் புறப்பட்டுட்டீங்க...?''

''அட நீங்க வேறே... பசங்க ஸ்கூல் அட்மிஷனுக்குக் கிளம்பிட்டிருக்கேன். வயிற்றெரிச்சலைக் கிளப்பாதீங்க, சார்...!?''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

'கண்ணு மண்ணு' தெரியாத மனிதர், முரட்டுப் புத்தி. கோபம் வந்து விட்டால் எதிரே இருப்பது மாடா மனுஷனா என்று தெரியாது.

''கரீம் பாய்க்குக் கோபம் வந்துட்டா... அம்புட்டுத்தான்!''

— கடை வீதியில் சக வியாபாரிகளுக்குக் கூட உள்ளூர ஒரு பயம் உண்டு. கோடு இழுத்த மாதிரி அவருக்கு இடம் ஒதுக்கி விட்டுத்தான் மற்றவன் கடை பரப்ப முடியும். தலைச் சுமையில் கொண்டு வந்த கோரைப் பாய்க் கட்டுகளை 'பொத்' தென்று தரையில் இறக்கி விட்டு, ''என்னலே....'' என ஒரு பார்வை பார்ப்பார். எல்லாம் சரியாக இருந்தால்தான் கட்டுக் களைப் பிரிக்கவே ஆரம்பிப்பார். அப்படியும் சில்லறைத் தகராறுகள் ஏற்பட்டு விடுவது உண்டு.

அம்மா அடிக்கடி சொல்லுவாள். ''இப்ப எவ்வளவோ தேவலை. வயசு முறுக்குல பார்க்கணும். யேயப்பா... மனுஷன் வீட்டுக்கு வந்தப்புறம்தான் எனக்கு நிம்மதி.''

அம்மாவைக் கேவலப்படுத்தி 'அந்தப் பயல்' சத்தம் போட்டது அப்படிப்பட்டவரிடம் என்ன விளைவுகளை ஏற்படுத்துமோ?

''விட்டேனா பாரு....'' எனக் கிளம்பி விட்டால் யாராலும் தடுத்து விட முடியாது. ஆம்பளை ரோஷம் எளிதில் அடங்கக் கூடியதா? ஒன்று கிடக்க ஒன்று நடந்து விட்டால் யாருக்கு நஷ்டம்? அவரை நம்பி ஐந்து ஜீவன்கள். இந்தக் காலத்தில் யார்தான் காப்பாற்ற முடியும்?

— அம்மா இதையெல்லாம் யோசிக்காமல்தான் குத்திக் கொண்டிருந்தாள்.

''பொறுடா... அவரு வந்ததும் உன்னை என்ன செய்யச் சொல்றேன்னு பாரு.....''

''சித்த சும்மா இரும்மா....'' என ஸல்மாவும் அடக்கிப் பார்த்தாள்.

அடங்குகிறவள் சண்டைக்கு ஏன் ஆயத்தமாகிறாள்?

''போடி...... உன் வேலையைப் பார்த்துக் கிட்டு.....'' என்று எரிந்தாள்.

அக்கம் பக்கத்திலும் அம்மாவின் பக்கம் தான் பேசினார்கள்.

''நீ உம்பாட்டுக்கு இருக்கணும், ஸல்மா, வயசுப் புள்ள இதிலெல்லாம் தலையிடக் கூடாது. நாசமாப் போனவன் என்ன ஆட்டம் ஆடிட்டான். காசுத் திமிர்ல எது வேணா பேசலாமோ? தட்டிக் கேக்கலேன்னு மரியாதை இல்லே.... ஆமா....!''

அத்தாவுக்குத் தகவல் சொல்ல ஆள் போயிற்று.

''அவரு கடையில இல்ல... சரக்கு வாங்கறேன்னு மத்தியானம் போனவரு வரலேங்கிறாரு பக்கத்துக் கடை ஆளு.....'' என்றான் போய் வந்தவன்.

வெயில் மறைய, இருட்டிக் கொண்டு வந்தது.

''அவரு காதுக்கு இந்த விஷயம் போகாம பார்த்துக்குங்க... நாயனே.... நாகூர் ஆண்டவரே......''

— ஸல்மா மனசுக்குள் ஜபித்துக் கொண்டாள்.

**வா**ழ்க்கைங்கிறது சௌகரியமானதா இருக்கணும். சுகமான மனசு. நிம்மதியான தூக்கம். கவலை இல்லாத சோறு. சந்தோஷமான பேச்சு. சிரிப்பு..... ம்..... இப்படியா எழுதுவான் இந்த ஆண்டவன்...?' — நோன்பு திறக்கத் தயாராகப் பல் துலக்கி விட்டு வாய் கொப்புளித்தாள் ஸல்மா.

காய்ந்த வயிற்றுக்குள்ளிருந்து 'கிர்' ரென்று ஓசை வந்தது.

தன் பொருட்டுப் பசியையும், தாகத்தையும் பொறுத்து விரதம் இருப்பவர்களுக்கு அல்லாஹ் மறு உலகத்தில் சுவர்க்கக் கதவுகளைத் திறந்து விடுகிறான். கண்ணியத்திற்கு உரிய விஷயம்தான் இது.

இந்த உலக வாழ்க்கையில் அதில் ஒரு பங்கையாவது காட்ட மாட்டானா?

இன்னும் உலை கூட வைக்கவில்லை.

சின்னதுகள் இரண்டும் சூழ்நிலையின் இறுக்கத்தில் கணங்கிப் போய் ஸல்மாவைப் பார்த்தன. ''பொறுங்க....'' என்றாள் ஸல்மா.

பெரியவர்களின் 'பிரச்னைகளுக்காகப்' பிஞ்சு வயிறுகள் காத்துக் கொண்டிருக்க முடியாது. குறைந்தபட்சம் கஞ்சியாவது வைத்து நிரப்ப வேண்டும்.

சாம்பலை வழித்து விட்டு, அடுப்பைப் பற்ற வைத்தாள். உடம்பு அடித்துப் போட்ட சோர்வாக இருந்தது. ஈர விறகு அவ்வளவு சுலுவில் பற்றுவதாகவும் இல்லை. குனிந்து ஊத ஊத, நெற்றி நரம்புகள் புடைத்தன. கண்ணும், மூக்கும் எரிய, தலை வலிக்க ஆரம்பித்தது.

என்றைக்கும் இல்லாமல் அத்தாவின் மீது கோபமாக வந்தது.

என்ன மனிதர் அவர்? இத்தனை நீண்ட வாழ்க்கையில் என்னதான் சாதித்திருக்கிறார்? கண் திறந்த நாளிலிருந்து அடுத்த வேளை சோற்றுக்கான கவலை. உடம்பை மறைக்க நல்ல உடுப்பு இல்லாத குறை. நல்ல

நான் பெரிய நாட்களை சந்தோஷமாய்க் கொண்டாடிய அனுபவம் உண்டா?

ஆயிற்று. நேற்றுத்தான் பிறை கண்ட மாதிரி இருக்கிறது. இருபது நோன்பு ஓடி விட்டது.

அக்கம் பக்கத்தில் துணிமணிகள் தைத்து, "நல்லா இருக்கா பாரு...." என வீடு வீடாகக் காட்டிக் கொண்டிருக்க, இங்கு அதைப் பற்றிய பேச்சுக் கூட இல்லை.

வேண்டாம் என்றுதான் இருந்தது ஸல்மாவுக்கும். புதியது உடுத்தி யாருக்கு அழகு காட்டப் போகிறாள்? கடனில்லாமல் இருந்தால் அதுவே நிம்மதி.

போன வருஷம் கடன் ஏற்பட்டது கூடப் பண்டிகைச் செலவுகளை முன்னிட்டுத் தான். ஒரு வாரம் முன்பு வரைக்கும் கையைப் பிசைந்து கொண்டிருந்தவர், 'ஆனது ஆகட்டும்' என்று காதர்ஷாவிடம் போனார்.

"மச்சான்.... மூணு வட்டி. மாசத்துக்கு இவ்ளோன்னு கரெக்டா காசு வந்துரணும்...." — இது காதர்ஷா.

"அதுக்கென்ன.... நானே கொண்டு வந்து குடுத்துட்டுப் போறேன்".

இரண்டு மாதம்தான் சொன்னபடி செய்ய முடிந்தது. பிறகு ஏதாவது செலவு.

— சின்னதுகளை ஸ்கூலில் சேர்க்க

— நிரந்தரமாகிவிட்ட அம்மாவின் வயிற்று வலியினால் ஆஸ்பத்திரிகளுக்குக் கொடுக்க.

— உறவுக்காரர்களின் விசேஷங்களுக்குப் போக வர.

தவணைகள் தவறி விட்ட சமயங்களில் காதர்ஷா வீட்டிற்கே வந்தது உண்டு. அத்தாவின் எதிரே கொஞ்சம் பயந்தபடி தான் பேசுவான். "மச்சான்.... உங்ககிட்ட பணம் வாங்க நடந்து புதுச் செருப்புக் கூடத் தேய்ஞ்சு போச்சு. கொஞ்சம் கவனிங்க......

"அதுக்கென்ன அடுத்த மாசம் கண்டிப்பா தந்துடறேன்" — தனக்கு அத்தகைய நாணயம் இருக்கிற மாதிரி அத்தா பதில் சொல்லுவார்.

இந்த நிமிஷம் வரைக்கும் இன்னும் முந்நூறு ரூபாய் பாக்கி.

மனித புத்தி எல்லா நாளும் ஒரே மாதிரியா இருக்கிறது? இன்றைக்கு என்ன கேடுகாலமோ.

"ஆரு அப்பன் வூட்டுக் காசு இது? அவரு வந்தா சொல்லி வையும்மா.... இன்னம் ரெண்டு நாள்ல பணம் வரணும். இல்ல கழுத்துல துண்டைப் போட்டு வாங்கத் தெரியும் எனக்கு...." போதை நெடியுடன் சாயங்காலம் வாசலில் நின்று கத்தினான் காதர்ஷா.

மதியம் தொழுது விட்டுப் படுத்த அம்மா, அப்போதுதான் எழுந்து வாசலுக்கு வந்தாள். நெற்றியில் அடித்த மாதிரி இருந்தன வார்த்தைகள்.

"தம்பி.... கொஞ்சம் அளந்து பேசு. உன் காசை யாரு இப்ப இல்லேன்னாங்க?" என்றாள்.

"ஏமாந்தா அப்படியும் சொல்லுவீக...."

அக்கம் பக்கத்தில் எட்டிப் பார்க்க, அவனுக்கும் வீராப்பு வந்தது.

"வீட்ல அவரு இல்லை. போய்ட்டு அப்புறம் வா....."

"நீ வச்ச ஆளா சொன்னதைக் கேட்டு ஆட?.... எண்ணி வாங்கலை? இப்ப துட்டு வேணும்......"

ஸல்மாவின் முகத்தை ஜன்னலில் கண்டு அவனது வேகம் அதிகரித்தது.

"சிங்காரிச்சுக்கிறாளுக வெக்கமில்லாம. இந்தப் பொழப்புக்கு....." என்று கெட்ட வார்த்தை ஒன்றைச் சொன்னான்.

"என்னடா சொன்னே... நாயே...." அம்மா பாய்ந்தாள்.

"சரிதான் போடி....."

அவனும் தொடர்ந்தான்.

போர்த்தியிருந்த மனுஷத்தனத்தை உதறி

விட்டு இருவரும் கத்த ஆரம்பித்தார்கள். தெரு நாறிற்று.

பர்தா மறைப்புக்கு அந்தப் பக்கம் இருந்து கொண்டு ஸல்மா என்ன செய்து விட முடியும்?

யார் யாரோ தலையிட்டு, பிரித்து, அம்மாவை இழுத்து வந்து உள்ளே தள்ள, அடிபட்டவளாய்ப் புலம்ப ஆரம்பித்தாள்.

''பொறுடா.... அவரு வரட்டும்''.

ஸல்மா மூச்சை இழுத்து, ''புப்....'' என்று ஊதியதில் ஆக்ரோஷமாய் ஜ்வாலை எழுந்தது. உலை கொதிக்கட்டும் எனக் காத்திருந்து, அரிசி களைய ஆரம்பித்தாள் அவள்.

நெருப்புப் பற்றிய மாதிரித்தான் இருந்தது கரீம் பாய்க்கு.

தனது கை மேலோங்கியே பழக்கப்பட்டவருக்குப் புதிய விஷயம்தான் அது. காலம் இப்படியும் கூட மாறுமா?

''எலே.... நெசந்தானா?''

''அப்புடித்தான் உங்க தங்கச்சி சொல்லிச்சு....'' என்றான் கடை ஆள்.

''ம்... அந்த அளவுக்குக் கொழுத்துப் போச்சா அவனுக்கு....''

கொஞ்ச நேரம் ஒன்றும் பேசவில்லை. முகம் மட்டும் இறுகிக் கொண்டு வந்தது.

''சல்லிக்காக. முந்நூறு ரூவா.... மூஞ்சியில விட்டெறிஞ்சுட்டு என்ன பண்றேன். பாரு.....''

விசுக்கென்று எழுந்தார். வேகத்தில் பாய்க் கட்டுகள் சரிந்தன.

''கல்லாவுல எவ்ளோ இருக்கு. எடு.....''

நாற்பது ரூபாயை எண்ணிக் கொடுத்தான். ''சன்னக் கோரை மூணு வித்திச்சு. அம்புட்டுத்தான்......''

கரீம் பாய் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. செருப்பை மாட்டிக் கொண்டு புறப்பட்டார்.

''பார்த்துக்க.... இதோ வந்துட்டேன்...''

இலேசில் விடக் கூடிய விஷயம் இல்லை. முதலில் பணத்தைப் புரட்டு. நேராகப் போ. நெஞ்சுச் சட்டையைக் கொத்தாகப் பிடித்து, ''நாயே.... நான் யாருன்னு நெனெச்சே....''

....ஆனால், யாரிடம் போய்ப் பணம் கேட்பது?

முதல் யோசனையிலேயே செட்டியாரின் பெயர் வந்தது. ஆதிகால சினேகிதம்.

விடுவிடுவென்று நடந்தார்.

அவர் போன நேரத்தில் வீட்டில் செட்டியார் இல்லை. ஆச்சி மட்டும் இருந்தாள்.

''வாங்க பாய்... எங்க ரொம்ப நாளா காணும்?''

உள்ளே தெலுங்கில் பேசி மகனைக் கூப்பிட்டாள்.

பெஞ்சில் உட்கார்ந்தார்.

''வாங்க.....'' என்றான் செட்டியார் மகன்.

''தம்பி சௌக்யமா.... அய்யா இல்லையா?''

''ஊருக்குப் போயிருக்காரு.... என்ன விஷயம்?'' அருகில் கிடந்த இங்கிலீஷ் பேப்பரைக் கையில் எடுத்துக் கொண்டான். ரொம்பவும் முக்கியமான சங்கதி ஒன்றில் ஈடுபட்டிருப்பதைப் போல அவனது பாவனை இருந்தது.

மனிதர்களின் பார்வையில் சினேகிதமானது எது என்பதைக் கண்டு கொள்ள முடியாதா? தான் அங்கிருப்பது அவ்வளவு உசிதமாகப்படவில்லை கரீம் பாய்க்கு.

''ஒண்ணுமில்லை.... இந்தப் பக்கம் ஒரு ஜோலி. சும்மா பார்க்கலாம்னு.... வரட்டுமா?'' என எழுந்தார்.

''நல்லது.....'' ஒப்புக்கு அவனும் எழுந்தான்.

மனம் கசந்து போய் விட்டது.

இனி யாரிடம் போவது?

அலசிப் பார்த்ததில் நாலைந்து கைகள் தேறின.

முத்தவல்லி ரஹீம் சாயபு. மரைக்காயர் மகன். கானா மூவன்னா. கல்லூட்டு லெப்பை....

முதல் இரண்டு பேரும் கையை விரித்தார்கள். எஞ்சிய நம்பிக்கையும் அற்றுப் போனது.

— 'சித்த முந்தி வந்திருக்கக் கூடாதோ... இப்பத்தானே பாய் ஒருத்தனுக்கு குடுத்தேன்..'

— 'எங்க பாய் பணம்...? ஏதும் சரி இல்லைங்க......'

பொறுங்கடா எனக்கும் ஒரு நேரம் வராமலா போயிரும்!

மனசுக்குள் ஏதேதோ கணக்குகளுடனும், ஆற்றாமையில் விளைந்த கோபத்துடனும் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தார் கரீம் பாய்.

சரக் சரக்கென்று பட்டாளத்து நடையில் நடக்கிற வேறு ஆம்பளை யாரு இருக்கிறார்கள் தெருவில்? — இது அத்தாதான்!



ஸல்மா படக்கென்று கதவைத் திறந்து வீதியை எட்டிப் பார்த்தாள். "அத்தா தான்......" என்று மெதுவாகச் சொன்னாள். அவள் மனம் 'அல்லாவே.....' என முணுமுணுத்துக் கொண்டது.

இதோ..... இதோ என்று அவள் எதிர் பார்த்து பயந்த தருணம் இதுதானே.

கரீம் பாய் உள்ளே நுழைந்து, சட்டையைக் கழற்றி, மாட்டிவிட்டு, கையில் தண்ணீர் செம்புடன் வாசலுக்குப் போகும் வரை யாரும் பேசவில்லை. கை கால் அலம்பி, துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்ட போது அம்மா ஆரம்பித்தாள்.

"சாயங்காலம் அந்த நாசமாப் போனவன் வந்திருந்தான்....."

"யாரு....."

"அவன்தான்.... காதர்சா....."

"ம்....."

"வாய்க்கு வந்தபடி கத்தறான்... தெருவுல மானம் போயிருச்சு....."

அவரது பிரதிபலிப்புக்களை அளவெடுக்கிற மாதிரி அம்மா சற்று நிறுத்தினாள். ஸல்மாவுக்குத் திக் திக்கென்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது.

பணம் உடனே வேணுமாம்..... அதுக்கு என்னென்ன கேள்விங்கிறீங்க...."

"............"

"புள்ள வாசல்ல நிக்கறா.... பார்த்துட்டுச் சிங்காரிச்சுக்கிறாளுக 'பாருங்கிறான். பணம் கேக்க வந்தவனுக்கு இந்தக் கேள்வி எதுக்கு? ம்...." உடனிருந்த பல்கீஸ் சித்தி ரோஷம் வருகிற பகுதியில் உசுப்பி விட்டாள்.

"நாக்கை அறுத்து எறியணும். காசுத் திமிரை இங்கியா காமிக்கிறது....."

"........."

"பதிலெதுவுமின்றி அவர் கேட்டுக் கொண்டிருந்தது நிறைய அர்த்தம் தருவதாயிருந்தது.

அம்மாவும் சித்தியும் சுருக்கமாக நடந்ததைச் சொன்னார்கள்.

"ம்ஹ்ம்...." என்று அத்தா நீண்ட பெருமூச்சு விட்டார்.

அத்தா தொழுகையை முடித்து விட்டு வந்தமர்ந்தார். மெள்ளச் சொன்னார்: "கையில நாலு காசு சேர்ந்ததும் மனுஷனுக்குத் தாரதரம் தெரியாமப் போயிருது....

யாரும் எதிர்பாராத பேச்சு இது. ரோஷமோ, ஆவேசமோ இல்லாமல்.... அவர்தானா?



"என் பொண்டாட்டியை லட்சத் தீவுக்கு அனுப்பப் போறேன்....."

"அப்படியா?"

"ஆமாம்! ஒவ்வொரு தீவுலேயும் ஒரு நாள் இருந்துட்டு வரச் சொல்லப் போறேன்..."

— நாகை பாபு.

"ஆமா. கண்ணு கூடத் தெரியறது இல்லை.... போயி என்னன்னு கேட்டுட்டு வாங்க....."

"போகலாம். ரெண்டு நாள் பொறு..."

"ரெண்டு நாளா?.... சாகிற மாதிரி அவன் கேட்ட கேள்விக்கு....."

"பொறுடி... பணம் வேணாமா...? மூஞ்சியில விட்டெறிஞ்சுட்டு.... அப்புறம் பார்த்துக்க....."

சித்திக்கு அவரது பதில் திருப்தி இல்லாதது போல இருந்தது.

மனைவியாய் அம்மா "இப்படியும் ஒரு ஆம்பளை உண்டுமா?" என்று புலம்பினாள். அவளுக்குத் தான் வாழ நேர்ந்த துர்பாக்கியம் எல்லாம் அப்போதுதான் ஞாபகத்திற்கு வந்ததைப் போல இருந்தது.

எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பு வைக்கிற மாதிரி அத்தா சொன்னார்:

"சும்மா கெடந்து புலம்பாதே..... சும்மா ரோஷப்பட்டு ஒண்ணும் ஆகாது. காசு இல்லாம என்னால அந்தப் பய எதிர்ல நிக்க முடியாது....."

அவர் அதைச் சொன்ன தொனியில் விவரிக்க முடியாத சோகம் புலப்பட்டது ஸல்மாவுக்கு. அவள் பிரார்த்தித்துக் கொண்டபடி விபரீதம் எதுவும் நிகழாததில் திருப்திதான் என்றாலும், கம்பீரத்தை இழந்த தகப்பனைப் பார்க்க கஷ்டமாகவே இருந்தது அவளுக்கு.



• கொட்டம்...

# நீங்கள் கேட்டவை — தராசு



• அழைப்பு...



## தமிழர்கள் தூக்கக் கலக்கத்தில் வோட்டுப் போட்டார்களாமே?



.....அடங்கியது!

* டி. அனு, போடி.

? இன்றைய சூழ்நிலையில் தமிழ் நாட்டின் பலம் எது? பலவீனம் எது?

! பலம், வரப் போகும் தேர்தல்தான்; பலவீனமாகத் தேர்தல் முடிவுகள் அமைந்து விடக் கூடாதே என்பதுதான் கவலை!

* கபா இராஜேஸ்வரன், குளத்தூர்.

? 'நாம் இரட்டைக் குழல் துப்பாக்கியாக இருந்து காங்கிரஸுக்குப் பாடம் புகட்ட வேண்டும்' என்று தி.மு.க. தலைவர் கருணாநிதிக்கு ஜானகி அணி வீரப்பன் அழைப்பு விடுத்திருக்கிறாரே?

! அண்ணாவின் அந்த உபமானம் இதற்குப் பொருந்தாது. அவலும் உமியும் பழமொழிதான் பொருத்தம்!

* இடலை சுதா, குளத்தூர்.

? இந்தியாவின் எதிர்காலம் பற்றி ஓ. ஆர். ஜி. நிறுவனம் நடத்திய ஆய்வில், இன்னும் பத்து ஆண்டுகளில் இந்தியா குட்டிச் சுவராகி விடுமென்று பெரும்பாலான இளைஞர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனரே?

! நமது தலைவர்களிடத்தில் இளைஞர் சமுதாயத்துக்கு அத்தனை நம்பிக்கை!

* உஷா கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

? அம்பிகா — ராதா இவர்களின் கொட்டத்தைத் தமிழ் சினிமா ரசிகர்கள் அடக்கி விட்டனரே?

! அப்படித்தான் தோன்றுகிறது; இல்லையெனில் அரசியலில் சேர்ந்திருப்பார்களா!

* சிவாஜி பாபு, சென்னை — 23.

? 'இரண்டு மூன்று முறை தமிழக மக்கள் தூக்கக் கலக்கத்தில் வோட்டுப் போட்டதால் தமிழகம் கெட்டுப் போய் விட்டது' என்று மூப்பனார் கூறியிருப்பது பற்றி...?

! இ. காங்கிரஸுக்கு ஆதரவாக நாடாளுமன்றத் தேர்தலில் போட்ட வோட்டுக்களையும் சேர்த்துத்தானே சொல்கிறார்!

* ஜி. சண்முகக் குமார், திருச்சி.

? 'என் தந்தையார் சமாதியில் ஏழு கோடி நான் புதைத்து வைத்திருப்பதாக ஜெயலலிதா அணியினர் கூறுகின்றனர். வேணுமானால் சமாதியைத் தோண்டிப் பார்க்கட்டும்' என்று முத்துசாமி கூறியிருக்கிறாரே?

! உடன் கட்டை அணி, சமாதி சமாதியாக வீண் பிரச்னைகளைக் கிளப்பிக் கொண்டு போவதில் வியப்பில்லை.

* உமார்த்தி, கோவை.

? பகல் பன்னிரண்டு மணி வெய்யிலில் அருந்த சுகமானது இளநீரா, மோரா?

! அவற்றின் சுகத்தை நான் குறைத்துக் கூறவில்லை என்றாலும், அரை மூடி எலுமிச்சம் பழம் பிழிந்து, இரண்டு ஸ்பூன் சர்க்கரை சேர்த்து, ஒரு சோடாவை உடைத்துக் கலந்து, ஒரு கட்டி ஐஸ் மிதக்க விட்டால்.... சுகமோ சுகம்....!

* அ. ஜமால் மொய்தீன், சென்னை — 52.

? 'காங்கிரஸால் மட்டுமே மதுவை ஒழிக்க

முடியும்' எனக் குமரி அனந்தன் பேசியிருக்கிறாரே?

! அவர்கள் ஆளும் மாநிலங்களில் மது ஒழிக்கப்பட்டிருக்கும் லட்சணம் நமக்குத் தெரியாதா? ஹய்யோ! ஹய்யோ! நெற்றி வீங்கத் தலையிலடித்துக் கொண்டாலும் போதாது!

* பி. வி. சீனிவாசன், பின்னத்தூர்.

? அண்மையில் நடந்த விழா ஒன்றில் தமிழ் அறிஞர்கள் பலரும் ஆங்கிலத்தில் பேச, திருச்சி மாவட்டக் கலெக்டர் உஜாகர் சிங் தூய தமிழில் பேசி அசத்தினாராமே?

! அதுதான் நம்மவரின் மொழிப்பற்றுக்கும் மற்றவர்களுடைய தாராள மனப்பான்மைக்கும் உள்ள வித்தியாசம்!

* எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

? 'இந்தியாவில் ஜனநாயகத்தைக் குழி தோண்டிப் புதைக்காமல் காப்பாற்றி வருவது காங்கிரஸ்தான்' என்று மூப்பனார் கூறியுள்ளாரே?

! ஏன், மூப்பனார் மட்டும் தமாஷாகப் பேசக் கூடாது என்று ஏதாவது சட்டமா என்ன! பேசி விட்டுப் போகட்டுமே, உமக்கென்ன?

* சுவாதி செந்தில் குமார், திருமருகல் *

? பொற்கோயிலில் மத்திய அரசின் நடவடிக்கைகளைப் பாராட்டுகிறீர்கள்தானே?

! ஓ. யெஸ்! நடவடிக்கையில் ஈடுபட்ட நமது வீரர்களையும் சேர்த்துப் பாராட்டுகிறேன். குறைந்தபட்ச உயிர் சேதத்தில் பொற்கோயில் பயங்கரவாதிகளிடமிருந்து மீட்கப்பட்டது. வெகு நாட்களாகத் தேடப்பட்டு வந்த அதி பயங்கரவாதிகள் பலர் சரணடைந்தனர். கோயில்களை அரசியலுக்குப் பயன்படுத்தக் கூடாது என்று கொண்டு வரப்பட இருக்கும் சட்டமும் வரவேற்கத் தக்கதே. தானியங்கு அதிவேக துப்பாக்கிகள் வைத்துக் கொள்ளவும் தடை விதித்துச் சட்டம் வரப் போகிறதாம். நல்லது. ஆனால் இவையெல்லாம் பஞ்சாப் பிரச்னைகளுக்குத் தீர்வல்ல. பொற்கோயில் வளாகம் மீட்கப்பட்டுக் கொண்டிருந்த அதே சமயத்தில் பஞ்சாபின் இதர பகுதிகளில் ஏராளப் படுகொலைகள் நடந்தன; இன்றும் தொடர்கின்றன. ஒரு பயங்கரவாதியை ஒழித்தால் அவனிடத்தில் இன்னும் நாலு பயங்கரவாதிகள் தோன்றுவர். மக்களை மேன்மேலும் பகைத்துக் கொள்வதில்தான் முடியும். அரசியல் தீர்வுக்கு அவசரம் இருக்கிறது. இதை மத்திய அரசு புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. தனி நாடாகப் பிரிந்து போவது தவிர இதர பல கோரிக்கைகளுக்கு விட்டுக் கொடுக்க வேண்டும். பஞ்சாபைப் பஞ்சாபியரே ஆள வேண்டும். அவர்களைக் கொண்டேதான் பயங்கரவாதிகளை ஒடுக்க வேண்டும். இல்லி ஆதிக்கம் வெறுப்பையே வளர்க்கும்.



* தமிழினின் தூக்கம்!

* ப. ஷேக் அலாவுதீன், திருநெல்லிக்காவல்.

? கவர்னர் அலெக்ஸாண்டர் 'ஜாலி' டைப்பா, 'மூடி' டைப்பா?

! கொஞ்சம் ஜாலியாக உதகையில் இருந்து விட்டு வரலாம் என்று நினைத்துப் போனவர் அங்கு வெடித்த குண்டாலும் சென்னையில் ஆயிரம் குடிசைகள் தீக்கிரையான சம்பவத்தாலும் மூடியாகியிருப்பார், நிச்சயம். குடிசைகளுக்கு தீப் பிடிக்காத ஆஸ்பெஸ்டாஸ் கூரை போட அரசு கடனுதவி அளிக்கலாம். ஆயிரம் இரண்டாயிரம் என்று ஏராளமான குடிசைகள் உருவாகும் காலனியிலேயே ஒரு பக்கத்தில் தீயணைப்பு நிலையத்தை நிரந்தரமாக அமைக்கலாம். காங்கிரஸ் மாநாட்டுப் பந்தலுக்குப் பக்கத்தில் முன் ஜாக்கிரதையாகத் தீயணைப்பு வாகனங்களைக் கொண்டு போய் நிறுத்தவில்லையா, என்ன!

* தங்க. குரு சுப்ரமணியன், சென்னை—88.

? அன்று எவ்விதப் பிரதி பலனையும் எதிர்பாராமல், தன்னலம் கருதாமல் சுதந்திரப் போராட்டக் களத்தில் குதித்த தியாகிகள், இன்றோ தனிச் சங்கம் அமைத்துக் கொண்டு, 'பென்ஷன் அதிகமாக வேண்டும்; கல்வி, வேலை வாய்ப்புக்களில் தங்கள் குடும்பத்தினருக்கு முன்னுரிமை வேண்டும்...' என்பது போன்ற கோரிக்கைகளை முன் வைத்து மற்றவர்களைப் போலவே போராட்டம் நடத்திக் கொண்டிருப்பது எதைக் காட்டுகிறது?

! உண்மையிலேயே நெருடலாகத்தான் இருக்கிறது. நிஜமான தியாகிகள் இது போன்ற கோரிக்கைகளைச் சொல்வதற்கே கூச்சப்பட வேண்டும்.

---

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

சுவாதி செந்தில்குமார்,
1—60, தெற்குத் தெரு,
திருமருகல் — 609 702.

ஜூனியர் விகடன்

# காணாமல் போன

தாலுகா ஆபீஸ் கிளார்க் ராமானுஜத்தின் மனைவி, திடீரென ஊருக்குப் புறப்பட வேண்டியிருக்கிறது. இரண்டு பெண்களுக்கும் கணவனுக்கும் சாயந்தரம் டிபனுக்கு இருக்கட்டுமே என்று வடை செய்து வைத்து விட்டுப் புறப்படுகிறார். மாலையில், ராமானுஜம் வீடு திரும்பும் போது, பக்கத்து வீட்டில் பெண் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. அவர்களை அழைத்துக் கொண்டு, கதவைத் திறந்து, வீட்டுக்குள் நுழைகிறார். சமையலறைக்கு ஆசையாய் ஓடிப் போய்ப் பார்க்கும் போது, வடை பாத்திரம் காலியாயிருக்கிறது—ஓரிரு துண்டுகள் தவிர. விஜயா செய்து வைத்து விட்டுப் போன வடைகள் என்னவாயின? இது பற்றி விசாரித்து ஜூனியர் விகடனும் கல்கியும் கட்டுரை எழுதினால் அவை எப்படி இருக்கும்?...

**புத்தனாம்புரத்தில்...**

**வடை மர்மம்!?**

**ஜூ. வி. நேரடி நடவடிக்கை!**

ராமனாதபுரம் மாவட்டம், திம்மனூரிலிருந்து 7.5 கி.மீ. தூரத்தில் இருக்கிற புத்தனாம்புரம் கிராமத்தின் வடை விவகாரம், பரபரப்பாக மாவட்டம் முழுவதும் பேசப்படவே, நாமும் சுறுசுறுப்படைந்தோம். புத்தனும்புரத்துக்குப் புறப்பட்டோம். பஸ்ஸில் போகும் போது கண்டக்டரின் வாயைக் கிளறினோம். மனிதர் வாயைத் திறக்கவில்லை. நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டதும், அவர் ஊரைப் பற்றிய பொதுவான விவரங்களைக் கூறினார். ஆனாலும் வடை விவகாரம் குறித்துத் தமக்கு எதுவும் தெரியாது என்று சாமர்த்தியமாய் நழுவி விட்டார்.

பஸ்ஸை விட்டு இறங்கியதும், சுற்றிலும் பார்த்தோம். 'புத்தனும் புரம்' என்று படு ஸ்டைலாய்ச் சொன்னது மஞ்சள் நிற போர்டு. இருந்தாலும் நமக்கு நம்பிக்கை வரவில்லை. அங்கே மாடு மேய்த்துக் கொண்டிருந்த சிறுவர்களிடம் நைசாய்ப் பேசினோம். அவர்களும் ஊர் பெயர் 'புத்தனும் புரம்' என்றதும்தான் நமக்கு நம்பிக்கை வந்தது.

ஒரு டீக்கடையில், 'இங்கே ராமானுஜம்னு'... என்று ஆரம்பித்ததுமே.... "ஓகோ! வடை விவகாரமா...?" என்று நம்மைக் கேட்டார்கள். நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டதும், "அப்பாடா! ஜூ.வி.



திருமதி விஜயா



ராமானுஜம்

# வடைகள்!

—எஸ். சந்திரமௌலி



ரவி

கலெக்டர்

நிருபர் வந்தாச்சு! இனி பிரச்னை தீர்ந்து விடும்!'' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள் சில இளைஞர்கள். ''நான் இட்டு கினு போறேன் சார் ராமானுஜம் ஊட்டுக்கு'' என்று சொல்லி, ரவி என்கிற இளைஞர் நம்மை அழைத்துச் சென்றார்.

''இவர்தான் ராமானுஜம்'' என்று முப்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒருவரை அறிமுகப்படுத்தினார் ரவி. அவரிடம், ''உங்கள் பெயர் என்ன?'' என்று கேட்ட போது, ''என் பெயர். ராமானுஜம்'' என்றார். ''நான் தாலுகா ஆபீஸ் கிளார்க்'' என்று ஆரம்பித்து விஷயத்தை நமக்கு விளக்கினார்.

அக்கம் பக்கத்தாரை விசாரித்ததில் அவருக்கு ஒரே ஒரு மனைவிதான் என்றும், அவர் பெயர் விஜயா என்றும், அவர் ஊருக்குப் போயிருக்கிறார் என்றும் தெரிய வந்தது. ராமானுஜத்திடம் 'நீங்கள் வடை சாப்பிடுவீர்களா?' என்று கேட்டோம். ''எனக்கு வடை என்றால் உயிர்! எனக்கு மட்டுமில்லை. எங்கள் வீட்டில் அனைவருக்குமே பிடிக்கும்'' என்றவர், ''என் பெண்டாட்டி ஆசையாக வடை செய்து வைச்சிட்டுப் போனா. ஆனா என் துரதிருஷ்டம் அது இப்ப காணாமப் பூடுச்சுங்களே!'' என்றார் வருத்தம் தோய்ந்த குரலில். நம் மனம் சங்கடத்திலாழ்ந்தது.

இதற்கிடையில் ராமானுஜத்தின் மூத்த மகன், ஒரு துண்டாய் எதையோ நம்மிடம் கொடுத்து. ''இதுதான் காலி பாத்திரத்துக்குள் மீது இருந்துச்சி'' என்றதும், அதைக் கையில் வாங்கிப் பார்த்து விட்டு, ஒரு துளி விண்டு வாயில் போட்டுச் சுவைத்தோம். அது வடையின் ஒரு பகுதிதான் என்பது ஊர்ஜிதமாயிற்று.

இது பற்றி போலீஸ் இன்ஸ்பெக்டரைச் சந்தித்துப் பேச விரும்பி, முயற்சி செய்தோம். 'புகார் பற்றி விசாரித்து வருவதால் கருத்து தெரிவிக்க இயலாது' என்று கூறி விட்டார்.

குழந்தைகளுக்கென்று, ஆசையாய் அவர்களுடைய அம்மா செய்து வைத்து விட்டுப் போன வடை காணாமற் போனது, நம் மனத்தைப் பிழிந்தெடுத்து விட்டது. ராமானுஜத்துக்கு ஆறுதல் சொல்லி விட்டுக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு பக்கத்திலிருந்த ஹோட்டலுக்குள் நுழைந்தோம். ஹோட்டல்காரரிடம் விஷயத்தைச் சொன்னோம். தாமே சில வடைகளை எடுத்துக் கொண்டு வந்து குழந்தைகளுக்குக்

கொடுத்தார். குழந்தைகள் சந்தோஷமாய்ச் சாப்பிட்டார்கள். வடை சாப்பிடும் போது தொண்டை அடைத்துக் கொண்டால்... என்ன செய்வது என்று இரண்டு டம்ளர் தண்ணீரைக் கொடுத்தோம். வடையை இழந்த கவலையை மறந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த அவர்களின் மகிழ்ச்சியை ரசித்தபடியே விடை பெற்றோம்.

கல்கி கவர் ஸ்டோரி:

## அம்மாவும் போனார்! வடையும் போயிற்று!

### பள்ளி மாணவியின் சோகக் கதை!

புத்தனும்புரம் கிராம இளைஞர் சங்கத்தின் செயலாளர் ரவியிடமிருந்து நமக்கு ஒரு கடிதம் வந்தது. புத்தனும்புரம் போய் ரவியைச் சந்தித்த போது, அவர் சம்பவம் சம்பந்தமான ராமானுஜம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

''நான் கடந்த பதினேழு வருடங்களாய்த் தாலுகா ஆபீஸில் பணிபுரிகிறேன். எனக்குத் திருமணமாகிப் பன்னிரண்டு வருடங்கள் ஆகின்றன. எங்கள் திருமண வாழ்க்கையில், இரண்டு முறை பிக்பாக்கெட் அடிக்கப்பட்டு என் பணம் காணாமற் போயிருக்கிறது; கொடியில் காயப் போட்டிருந்த போது என் மனைவியின் ஜாக்கெட் காணாமற் போயிருக்கிறது; என் பெரிய பெண்ணின் பேனா, ஸ்கூலில் காணாமற் போயிருக்கிறது. சின்னவளின் பலப்பம் காணாமற் போயிருக்கிறது. ஆனால் இதுவரை ஒரு தடவை கூட எங்கள் வீட்டில் வடை காணாமற் போனதில்லைங்க!'' என்று கண்கலங்கக் கூறினார் ராமானுஜம். பக்கத்தில் நின்று கொண்டிருந்த அவருடைய பெண்களைக் கவனித்தோம். அவர்கள் கண்களிலும் வடையை இழந்த சோகத்தைக் காண முடிந்தது.

இந்தச் சம்பவம் எப்படி நிகழ்ந்தது? திடீரென ராமானுஜத்தின் மனைவி விஜயாவின் தங்கைக்கு உடம்பு சரியில்லை என்று தந்தி வர, விஜயா ஊருக்குப் புறப்பட்டதையும், அந்த அவசரத்திலும், குழந்தைகளுக்கும், கணவருக்கும் தின்பதற்காக வடை செய்து வைத்து விட்டுப் போனதையும், இவர் ஆபீஸிலிருந்து வீடு திரும்பிய போது, வடை காணாமற் போயிருந்ததையும் ராமானுஜம் வருத்தம் மேலிட எடுத்துக் கூறினார். அதோடில்லாமல், பீரோவிலிருந்து ஒரு கடிதத்தையும் எடுத்துக் கொண்டு வந்து காட்டினார். 'நான் செய்து வைத்திருந்த வடைகளைச் சாப்பிட்டீர்களா? நன்றாய் இருந்ததா? என்று அன்போடு கேட்டிருக்கா சார் என் மனைவி!'' என்று கண்களில் கண்ணீர் மல்கக் கூறினார். நமக்கும் கடிதத்தைப் படித்ததும் வருத்தம் மேலிட்டது. 'இந்த விஷயம் குறித்து போலீஸில் புகார் கொடுத்திருக்கிறீர்களா?' என்று விசாரித்த போது, "புகார் கொடுத்து என்னங்க பிரயோஜனம்? போலீஸ் ஸ்டேஷனுக்கு நடையாய் நடக்கிறதுதான் மிச்சம்! வடை கிடைத்தபாடில்லை' என்றார் விரக்தியாய்.

நீங்கள்தான் இந்தப் பிரச்னைக்கு ஒரு வழி காட்ட வேண்டும் என்று அவர் நம்மிடம் சொன்ன போது, ''நிச்சயம் உங்கள் பிரச்னையைக் கலெக்டரிடம் எடுத்துச் சொல்கிறோம். அவ்வளவுதான் எங்களால் முடியும்'' என்றோம்.

நாம் மாவட்டக் கலெக்டர் பி.டி. ஓம்கார்நாத்—ஐச் சந்தித்தோம். நிறைய அதிகாரிகள் வந்திருந்தனர்.

கல்கி: கண்ணனூர் அருகில் உள்ள புத்தனும்புரம் கிராமத்தில் வசிக்கும் தாலுகா ஆபீஸ் கிளார்க் ராமானுஜம் வீட்டில், அவர் மனைவி ஊருக்குப் போகும் முன் செய்து வைத்த வடைகளைக் காணவில்லையாம். வடை இல்லாமல் வாடும் குழந்தைகளை நாங்களே நேரில் கண்டோம். இது குறித்துக் காவல் நிலையத்தில் புகார் கொடுத்தும், ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லையாமே?

கலெக்டர்: இதுவரை இந்தச் சம்பவம் என் கவனத்துக்குக் கொண்டு வரப்படவில்லை. (மாவட்டக் காவல் துறை அதிகாரியைப் பார்க்கிறார்.)

காவல் துறை அதிகாரி: அந்தச் சம்பவம் பற்றிப் புகார் கொடுக்கப்பட்டிருப்பது உண்மைதான். இது குறித்துத் தீவிர புலன் விசாரணை நடக்கிறது.

கல்கி: எங்கள் கேள்விக்குப் பொறுமையுடன் பதிலளித்த உங்களுக்கும் மற்ற அதிகாரிகளுக்கும் கல்கி சார்பில் மிக்க நன்றி. இன்னும் மூன்று மாதங்கள் கழித்து நாங்கள் ரீ—விசிட் செய்வோம். அப்போது வடை கிடைத்து விட்டதா என்று மறுபடியும் விசாரிப்போம்.

கலெக்டர்: ஓ! தாராளமாய்! உங்கள் ரீ—விசிட்டிற்காக நான் காத்திருக்கிறேன்.

---

''எதுக்கு எமதர்மன் வெட்னரி டாக்டரை நரகத்திற்கு அனுப்பாமல் தன்னுடனேயே தங்க வைத்துக் கொண்டார்?''

''அவருடைய எருமைக்கு வைத்தியம் செய்யத்தான்!''

— சேலம் சேகர்.

---



# மக்கள் நலனுக்கு எதிரான அரசின் சுயநலன்!

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் பாலை சென்ட்ரல் பாங்க் மூழ்கிப் போனதில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது. ஒருவித அச்சமும் பரவியது. அப்போதுதான் அரசு, வங்கிகளிடம் மக்களுக்கு நம்பிக்கை பிறக்கவும், அவர்கள் போட்டு வைக்கும் பணம் திரும்பக் கிடைக்கும் என்ற உத்தரவாதம் அளிக்கவும் தான் ஏதேனும் செய்தாக வேண்டும் என்று உணர்ந்தது. இதன் விளைவாகத்தான் 'டெபாஸிட் இன்ஷியூரன்ஸ் கார்ப்பரேஷன்' உருவானது. இதன் நோக்கம், வங்கிகளில் பணம் போட்டு வைக்கும் — டெபாஸிட்தாரர் ஒவ்வொருவருக்கும் ரூபாய் ஐயாயிரம் வரை உத்தரவாதம் தருவதுதான். இந்த உத்தரவாதம் படிப்படியாக உயர்ந்து இன்று முப்பதாயிரம் ரூபாயில் நிற்கிறது. அதாவது. ஒரு வங்கி மூழ்கினாலும் கூட ஒவ்வொரு டெபாஸிட்தாரருக்கும், அவர் போட்டு வைத்திருக்கும் தொகை ரூபாய் முப்பதாயிரத்துக்கு அதிகமானால் முப்பதாயிரம் ரூபாய் நிச்சயம் கிடைக்கும்; முப்பதாயிரத்துக்குக் குறைவாக வங்கியில் பணம் போட்டு வைத்திருப்பவர்களுக்கு அவர்கள் போட்டு வைத்துள்ள முழுத் தொகையும்கிடைக்கும்.இந்தஇன்ஷியூரன்ஸ் திட்டம் டெபாஸிட்தாரர்களிடையே நம்பிக்கை பிறக்கச் செய்தது. நல்ல காலமாக இந்தத் திட்டத்தைச் சோதித்துப் பார்க்க இதுவரை பிரமேயம் ஏற்படவில்லை! பாலை சென்ட்ரல் பாங்குக்குப் பிறகு கடந்த முப்பதாண்டுகளில்எந்தவங்கியும்மூழ்கிவிடவில்லை.

இன்றையச் சூழ்நிலையில் இந்த டெபாஸிட் இன்ஷியூரன்ஸ் அவசியமா என்ற கேள்வி கூட எழுந்திருக்கிறது. காரணம், தொண்ணூறு சதவீத வங்கி டெபாஸிட்கள் அரசுடைமையான வங்கிகளிடம்தான் உள்ளன. மற்ற தனியார் பாங்குகள் மூழ்கிப் போவது என்பதும் அநேகமாக நடக்க முடியாத காரியம்தான் என்னுமளவுக்கு ரிஸர்வ் வங்கியின் சட்ட திட்டங்கள், கட்டுப்பாடுகள் உள்ளன.

ஆனால் தனியார் நிறுவனங்களில் டெபாஸிட் செய்பவர்கள் நிலை வேறு. இன்று பல தொழில் — வர்த்தக நிறுவனங்களை ஒரு வரம்புக்கு உட்பட்டு டெபாஸிட்கள் பெற அரசு அனுமதித்துள்ளது. இதற்குப் பதினைந்து சதம் வரை வட்டி தரலாம் என்று இருந்த அனுமதியை அண்மையில் பதினாலு சதமாக அரசு குறைத்திருக்கிறது. இவ்வாறு மக்களிடமிருந்து தனியார் நிறுவனங்களால் பெறப்பட்டுள்ள டெபாஸிட் தொகை மொத்தம் நாலாயிரம் கோடி ரூபாயாகும்!

---

# வெய்யிலுக்குச் சிலர் பலியாவது ஏன்?

**வெய்யிலுக்குப் பலியாகிச் செத்துப் போகிறவர்கள் பற்றிப் பேப்பரில் செய்திகள் வருகின்றன. இது எப்படி நிகழ்கிறது? டாக்டர் விளக்குகிறார்:**

இதற்கு 'சன் ஸ்டிரோக்' தான் முக்கிய காரணம். 'சன் ஸ்டிரோக்' என்றால் என்ன? உடம்பில் திடீரென உஷ்ண நிலை அதிகரிப்பதுதான். கொளுத்தும் வெய்யிலில், நடந்து போகிறார் ஒருவர். வெய்யிலின் தகிப்பு தாங்க முடியாமல் கண்களை மறைக்கும்; தலை சுற்றல் வரும். மயக்கமடைந்து கீழே விழுந்து விடுவார். சட்டெனக் கவனித்து முதலுதவியளித்து விட்டு, ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகவில்லையெனில், மரணம் நேரிடும். காரணம்? உடலின் வெப்பநிலை அதிகரிப்பதால், நாடித் துடிப்பு அதிகரிக்கும். ரத்த அழுத்தம் குறைந்து கொண்டே போகும். இதனால் மூளைக்கும், இதயத்துக்கும் ரத்தம் பம்ப் செய்யப்படுவது குறையும். உடல் செயலிழந்து துவண்டு விழும்.

சன் ஸ்டிரோக்கிற்கு ஆட்பட்டவரை, உடனடியாய் நிழலில் படுக்க வைக்க வேண்டும். உடைகளைத் தளர்த்தி விட்டு, தண்ணீர் தெளிக்க வேண்டும். ஜில்லென்று தண்ணீர் குடிக்கக் கொடுக்க வேண்டும். மூளை மற்றும் இதயப் பகுதிகளுக்கு ரத்தம் அதிக அளவில் போகச் செய்ய இரு கால்களையும் தூக்கிப் பிடித்துக் கொள்ளலாம். நிலைமை ஓரளவு சீரடைந்ததும், ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்லலாம்.

யார் யாரெல்லாம் அதிகம் பாதிக்கப்படு




இதற்கு எந்தவிதமான இன்ஷியூரன்ஸ் திட்டமும் இல்லை என்பது கவனத்திற்குரியது. இப்படி டெபாஸிட் செய்பவர்கள் யார்? பெரும்பாலானவர்கள், உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெறும்போது கிடைக்கும் பணத்தை இப்படி முதலீடு செய்தவர்களே. வங்கியில் போடுவதைவிட, கம்பெனியில் போட்டால் சிறிது வட்டி கூடுதலாகக் கிடைக்கிறது என்ற ஆசையில் போடுகிறார்கள். ஆனால் இதில் 'ரிஸ்க்' இருக்கிறது. சமீபத்தில் பிரபல நிறுவனமான 'நிர்லான் ஸின்தடிக்ஸ்' தனது டெபாஸிட்தாரர்களின் பணத்தைத் திரும்பத் தர முடியாமல் தவித்தது. இப்படி வேறு சில நிறுவனங்கள் பற்றியும் அவ்வப்போது பேச்சு அடிபடுகிறது.

இந்த ஆபத்தைத் தவிர்க்க கம்பெனி டெபாஸிட்களுக்கும் ஒரு பாதுகாப்பு இன்ஷியூரன்ஸ் திட்டத்தை அரசு அமுல்படுத்த வேண்டும் என்று பல காலமாக அறிஞர்கள் கூறி வருகிறார்கள். அதிகபட்சம் ஒவ்வொரு டெபாஸிட்தாரருக்கும் ஐம்பதாயிரம் ரூபாய்க்கு இன்ஷியூரன்ஸ் பாதுகாப்புத் தரப்பட வேண்டும். தற்போது தனியார் நிறுவனங்கள் தரும் வட்டி, பதினைந்து சதத்திலிருந்து பதினாலு சதமாகக் குறைக்கப்பட்டிருப்பதால் இந்தப் பாதுகாப்பு இன்ஷியூரன்ஸ் திட்டத்துக்குப் பிரீமியம் செலுத்த கம்பெனிகள் தயங்காது.

ஆனால் இந்தச் சிறந்த நடவடிக்கையை அரசு இதுவரை எடுக்கவில்லை. காரணத்தை ஊகிப்பதும் எளிதுதான். வங்கிகளைவிட தனியார் நிறுவனங்கள் அதிகம் வட்டி தருகின்றன. தனியார் நிறுவன டெபாஸிட்டுக்குப் பாதுகாப்பு இன்ஷியூரன்ஸும் இருக்கிறது என்றால் ஏராளமான பேர் சற்றும் யோசிக்காமல் தங்கள் பணத்தை வங்கியிலிருந்து எடுத்துக் கம்பெனிகளில் டெபாஸிட் செய்ய ஆரம்பித்து விடுவார்கள்! 'பணம் திரும்பக் கிடைக்கும் என்ற உத்தரவாதம் இல்லையே' என்று இப்போதுள்ள தயக்கம், அப்போது அடியோடு நீங்கிவிடும் அல்லவா? அந்நிலையில் அரசுடைமையான வங்கிகளிடம் டெபாஸிட்கள் குறைந்து போகும் என்ற அச்சம்தான் இந்த நல்ல காரியத்தைச் செய்ய விடாமல் அரசைத் தடுத்துக் கொண்டிருக்கிறது!

ஆக மொத்தம், அரசின் ஒரு சுயநல நோக்கு, மக்களின் நலனுக்கு எதிராகச் செயல்படுகிறது என்றுதான் கருத வேண்டும்!

— வி. கோபாலன்.

---

கிறார்கள்? வயதானவர்கள், நீரிழிவுத் தொல்லையுள்ளவர், சிறுநீரக நோயாளிகள், இதய நோயாளிகள், சின்னஞ்சிறு குழந்தைகளைக் கொளுத்தும் வெயிலில்



என்னதான் துணியால் மூடி எடுத்துச் சென்றாலும் ஆபத்துத்தான். தோல் சம்பந்தமான வியாதி உள்ளவர்களும், சன் ஸ்டிரோக்கிற்கு ஆளாகக் கூடும். காரணம், பாதிக்கப்பட்ட தோல் பகுதிகளுக்கு, வியர்வையை வெளியேற்றும் சக்தி இல்லாமல் இருப்பதுதான்.

இது போல பலியாகிற கேஸ்கள் ஆந்திரப் பிரதேசத்தில்தான் அதிகம்.

தவிர்ப்பது எப்படி?

- வெளியே கிளம்பும் போது, தலைக்குக் குல்லாய் அணிந்து கொண்டு போகலாம், அட்லீஸ்ட் ஒரு கர்சீப்பாவது கட்டிக் கொள்ளலாம். கறுப்பு நிறக் குல்லாயோ, கர்சீப்போ கூடாது. வெள்ளை நிறம் உசிதம்.
- வெளியில் போகும் முன் நிறையத் தண்ணீர் குடித்து விட்டுப் புறப்பட வேண்டும்.
- கையுடன் பாட்டிலில் தண்ணீர் கொண்டு போகலாம்.
- சிட்டிகை உப்பு கலந்த தண்ணீர் பருகுவது மிகவும் நல்லது.
- கண்களை இருட்டிக் கொண்டு வந்தால், உடனே நிழலில் உட்கார்ந்து, தண்ணீர் தெளித்துக் கொள்ள வேண்டும்.

டாக்டர் ரங்கபாஷ்யம் கூறக் கேட்டு
எழுதியவர்: —மௌஷ்மி.

# நியூட்ரமூல்

## ஒவ்வொரு கோப்பையும் உரமூட்டும்




மிக நேர்த்தியான பால், மால்ட்,
கோக்கோ இவற்றின் சேர்க்கையே
போதும்...நியூட்ரமுல்

பரம்பரையின் சக்திக்கு!
நியூட்ரமுல் எல்லா
வீரர்களின் உடலும்
உள்ளமும் உரம்
பெற!



குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த்-388 001.

daCunha/GCM/147/88/TAM



# இருள் வரும் நேரம்

## சுஜாதா

## 8

டாக்டர் பத்மினி ராஜூம் ராம்பிரகாஷும் பேசிக் கொண்டிருக்கும் போது அம்ருதா உள்ளே வந்தாள். இருவரும் இயல்பாகப் பேசுவதை நிறுத்தி விட்டார்கள்.

"ஏன் ரெண்டு பேரும் மௌனமாயிட்டீங்க? என்னைப் பத்தித்தானே பேசிக்கிட்டு இருந்தீங்க?" என்றாள்.

"ஆமாம் அம்ருதா", என்று பத்மினி எழுந்து அவளை அணைத்து உட்கார வைத்தாள்.

"ஹௌ ஆர் யு மை சைல்ட்?" என்று அவள் கன்னத்தில் கை வைத்தார் ராம்பிரகாஷ்.

"நான் ஒண்ணும் குழந்தையில்லை. பார்த்தீங்களா டாக்டர்—குழந்தைத்தனமா நடந்துக்கிட்டேன்னு குத்திக் காட்டறார் பாருங்க!"

"அம்ரு, கம் ஆன்! எதுக்கெடுத்தாலும் தப்பா நெனைச்சுக்கக் கூடாது. உனக்காக டாக்டர் ராம் எத்தனை கவலைப்பட்டு, எத்தனை வேதனைப்பட்டார், தெரியுமா?"

"எதுக்காக பஸ்ல தனியா விட்டுட்டுப் போயிட்டாராம்?"

"நான்தான் சொன்னேனேம்மா, அது ஒரு ஆக்ஸிடெண்ட் மாதிரி — தற்செயலா நிகழ்ந்ததுன்னு."

"பாழாப் போகிற கார், அப்பத்தான் அங்கே தான் நிக்கணுமா?"

"நீ என்ன சொல்றே அம்ரு. வேணும்னுட்டே நிறுத்தினேன்னா?"

பத்மினி டாக்டரைப் பார்த்து, "கமான் ஸார்! அவ சொல்றதை சீரியஸா எடுத்துக்காதீங்க..." என்றாள்.

"பின்னே அவ சொல்றதைப் பார்த்தா எல்லாமே நானே சதி பண்ணி..."

"டாக்டர் ராம்பிரகாஷ்! உங்களுக்கும் இந்த நிலைமையைச் சமாளிக்க அனுபவமில்லை. அந்த அனுபவம் இல்லாத வரைக்கும் சும்மா இருக்கலாம்னே தோணுது."

அம்ரு தலையைக் கோதிக் கொண்டாள். நீண்ட அங்கி அணிந்திருந்தாள். தலை கலைந்திருந்தது. "பொட்டு இட்டுக்க அம்ரு."

"ப்ச்" என்றாள். வெறித்து சன்னலைப் பார்த்தாள். "வெளியே அந்தாளு என்னையே பார்க்கறான்!" என்றாள்.

"எந்தாளு? டோன்ட் பி ஸில்லி!"

"அவங்க எல்லாருக்கும் தெரியும்."

"அம்ரு அனாவசியமா புதுசு புதுசா விஷயங்களையெல்லாம் கற்பனை பண்ணிப் பார்த்துக்காத்த... அம்ரு! அந்தப் பேப்பரைக் கொண்டா, அந்தப் பேப்பரைக் கொண்டா!"

"இல்லை, நான் பார்க்கணும்" என்று அந்தப் பேப்பரைப் பிடுங்கிக் கொண்டு தன் அறைக்குள் போய்க் கதவைச் சார்த்திக் கொண்டுவிட்டாள்.

டாக்டர் பத்மினி ராம்பிரகாஷைக் குற்றம் சாட்டுகிறது போலப் பார்த்து, "டாக்டர், என்ன நீங்க பேப்பரை வீட்டுக்கு எடுத்துட்டு வர்றீங்க!" என்றாள்.

"அம்ரு, அந்தப் பேப்பரைக் கொடு. அதிலே போட்டிருக்கிறதெல்லாம்..."

"அம்ரு! அம்ரு!"

— கதவைத் தட்ட, உள்ளேயிருந்து பதில் இல்லை.

"க்விக் டாக்டர்! ஏதாவது எக்குத் தப்பாச் செய்துடுவா! அம்ரு! அம்ரு!" — டாக்டர் பத்மினி கூப்பிட்டுப் பார்த்தாலும் பதில் இல்லை. தோட்டத்துப் பக்கமாக இருந்த சன்னலை நாடி அங்கிருந்து எட்டிப் பார்த்ததில் அம்ரு படுக்கையில் உட்கார்ந்து கொண்டு விசித்து விசித்து அழுது கொண்டிருந்தாள்.

"அம்ரு, கதவைத் திறம்மா!"

"எல்லாருக்கும் தெரிஞ்சு போச்சு. பேர் கூடப் போட்டாச்சு; எல்லாருக்கும் தெரிஞ்சு போச்சு. நான் இனிமே எதுக்கு இருக்கணும்?"

"அதைப் பத்தி அப்புறம் யோசிக்கலாம்."

"என்ன ஸார்?" என்று பக்கத்தில் இருந்தவர்கள் ஒவ்வொருத்தராகக் கூட்டம் சேர்ந்தார்கள். டாக்டர் ராம் அவர்களைத் திகைப்புடன் பார்த்து, "ஸார், நீங்க போங்க நாங்க பார்த்துக்கறோம்!" என்றார்.

"ஏதாவது விஷத்தைக் கிஷத்தைச் சாப்பிட்டுட்டாங்களா? டாக்டரைக் கூப்பிட

ணுமா?''

"நான்தான் டாக்டர்; மிஸ்டர், நீங்க போக லாம், ப்ளீஸ்!''

"ஏதாவது ஹெல்ப் வேணுமா ஸார்? பேப்பர்ல போட்டிருந்தான்... ரொம்ப வருத் தமா இருந்துச்சு!''

"அய்யோ, எங்களைத் தனியா விட்டாலே பெரிய உபகாரம் சார், ப்ளீஸ்!''

"அப்பஹெல்ப்ஏதும்வேணுமா? ஸோடா கீடா...? சாப்பிட்டீங்களா?''

"வேண்டாம் ஸார், ப்ளீஸ், லீவ் அஸ் அலோன்'' என்று டாக்டர் நரம்பு புடைக்கக் கத்தினார்.

சோமசேகர் கமிஷனரின் அறைக்குள் நுழைந்தார்: "வா, சோமு; என்ன ஆச்சு? ஸ்டூடன்ட்ஸ் எல்லாம் ஊர்வலமா வந்து ...க்கப் போறாங்களாம்?''

"அடப்பாவமே! அவர்கிட்டே நான் பேச றேன். போன் நம்பர் சொல்லுங்க.''

கிருஷ்ணமூர்த்தி, விதான் சௌதாவில், விவ சாயத்துறை அமைச்சரின் அலுவலகத்தில், பீதார் ஜில்லாவில் பஞ்சத்தைப் பற்றி ஸ்டேட் மெண்ட் தயாரித்துக் கொண்டிருந்த போது, லலிதா சொன்ன சானிட்டரி சமாசாரம் ஞாபகம் வந்தது. எதிரே இருந்தவரிடம், "ராமாச்சார், சாயங்காலம் சூப்பர் பஜார் போகணும், ஞாபகப்படுத்துங்க'' என்றார்.

ராமாச்சார் சஞ்சே வாணி இதழைப் புரட் டிக் கொண்டு "பார்த்தியாய்யா, கப்பன் பார்க்கிலே நம்ம ஆபீஸ் எதிர்த்தாப்பலேயே ஒரு பெண்ணைக் கடத்திக்கிட்டுப் போயி...'' என்று ஆரம்பித்தார்.

"ஆச்சார், நான் அதைப் பார்த்தேன் ஆச் சார்!''



"ஆமாய் ஸார். என் டாக்டர் கூட!''

"எத்தனை பேரு அந்த பலாத்காரம் செய் தவங்க?''

"ரெண்டு பேருன்னு தெரியுது. பஸ் ஸ்டாண்டில இருந்து ஆட்டோவில கூட்டிட் டுப் போயிருக்காங்க. ஒரு ஆட்டோவில ரெண்டு பேருக்கு மேல...

"கொஞ்ச தூரம் போனப்புறம், மேற் கொண்டு ஆளுங்க சேர்ந்திருக்கலாமில் லையா?''

"இருக்கலாம். ஆனா அந்த அம்மா சொன்னபடி ரெண்டு பேர்தான் இருந்தாங் களாம்!''

"எவிடன்ஸ் கொடுக்கறாங்களா? பரவா யில்லையே?''

"இனிமேல் கொடுக்க மாட்டாங்க. பேப் பர்லே வந்ததிலே கணவனுக்குக் கோபம்!''

"பேப்பர்ல எப்படி வந்தது?''

"வீக்லி ப்ரீஃபிங்ல போயிருச்சு ஸார்.''

"எப்ப?''

"முந்தா நாள்!''

"என்ன ஆச்சு?''

"ராத்திரி ஓ.டி. பண்ணிட்டு ஸ்டாண் டிலபோய்நின்றேனா, இந்தப்பாழாப்போன தோமலூர் பஸ் வரவே இல்லை. அப்ப எதிர்த் திசையிலே வேகமா ஆட்டோ போறது. ஆட்டோ, ஆட்டோன்னு கூப்பிட றேன். அப்பதான் அதில முன் பக்கத்தில ஒரு ஆள் பின்பக்கத்தில ரெண்டு பேரு — ஒரு பெண் பிள்ளை — அந்தம்மா கூச்சல் போடறாப்பல இருந்தது. ஆட்டோ கப்பன் பார்க்குக்குள்ளே நுழையுது. போலீஸ் காரங்க யாரும் இல்லை, நான் தனியா பஸ் ஸ்டாண்டில நிக்கறேன். ஆள் நடமாட்டமும் இல்லை.

"போலீஸ்ல சொன்னீங்களா?''

"இல்லை ஆச்சார். அடையாளம் வேற

குறிச்சு வெச்சிருக்கேன். ஏஸிடின்னு ஆட்டோ பின்னால எழுதியிருந்தது.''

''ஏன்யா இதைபோலீஸ்கிட்டச்சொல்லக் கூடாது?''

''என் பெண்டாட்டி அந்த வம்புக்கு எல்லாம் போகாதீங்க, நீங்களே ரேப் பண்ணதாக் குற்றம் சாட்டுவாங்கங்கறா.''

''சேச்சே, அப்படியெல்லாம் யார் சொன்னா?''

''அப்ப ஆச்சார், நீங்களே போன் பண்ணிச் சொல்லிடுங்களேன்.''

''நானா, நான் பார்க்கலையே. பார்த்த ஆள்தான் போன் பண்ணணும்.''

''இப்ப வேட்டாயிருக்க ஆச்சார். இப்பப் போய்ச் சொன்னா, ஏன் இத்தனை நாள் சும்மா இருந்தேன்னு ரெண்டு தட்டு தட்டினா?''

''பெட்டர் லேட் தேன் நெவர்.''

''என்னய்யா, நானு நானுன்னு திரும்பத் திரும்பச் சொல்கிறீரே!'' விஷயம் என்ன சொல்லுப்பா!''

''என் பேரு, நானு... இந்த ஆட்டோ விஷயத்தைப் பற்றி...''

''எந்த ஆட்டோ?''

''அதான் சுப்பன் பார்க்கிலே... ரேப்பு...''

''ஒரு நிமிஷம்...''

''கிருஷ்ணமூர்த்தி ராமாச்சாரின் முகத்தை நோக்க அவர், ''என்ன?'' என்றார்.

'''ஒரு நிமிஷம்' என்று சொன்னான்.''

''ரிக்கார்ட் பண்ணப் போகிறான்!''

''வெச்சுரலா? எதுக்கு வம்பு?''

''வெச்சா இன்னும் குற்றம்! போன் பண்ணியாச்சுன்னு பேசித்தான் ஆகணும்!''

''எப்படித் தெரியும், நாமதான் போன் பண்ணோம்னு?''



''அப்ப போன் பண்ணலையாங்கறீரா?''

''எனக்கு அப்படித்தான் தோணுது.''

''என் மனைவி கேட்டால் கொன்னு போட்டுருவா.''

''அவங்ககிட்டே எதுக்குச் சொல்லணும்? போன் பண்ணுமே! பேர் கீர் சொல்ல வேண்டாம், 'நான் ஒரு உண்மை விளம்பி. ஆட்டோவைப் பார்த்தேன்னு' பொதுவா...''

''அதுகூடச் சரிதான்!''

ஆச்சார் டெலிபோன் டைரக்டரியை எடுத்துப் போலீஸ் கண்ட்ரோல் ரூம் எண்ணை முதல் பக்கத்திலேயே கவனித்தார், தயங்கினார்.

''அலோ இஸிட் போலீஸ் கண்ட்ரோல் ரூம்?''

''அலோ!''

''நானு, நானு...''

''உங்கள் பெயர் என்ன?''

''பெயர் முக்கியமில்லே, நானு நானு...''

''அதுக்கெல்லாம் அவங்க [illegible] வெச்சிருக்காங்க.''

''அலோ'' என்று மற்றொரு குரல் கேட்டது. ''இன்ஸ்பெக்டர் தர்மராஜன் ஸ்பீக்கிங், நீங்க யார் பேசறது? — அந்தக் குரல்ல இருந்த அதிகாரமும் வன்மையும் கிருஷ்ணமூர்த்தியைத் தன்னையறியாமல் பேச வைத்தன.

''அலோ, ஸார்! நான் கிருஷ்ணமூர்த்தின்னு விதான் சௌதாவில இருந்து பேசறேன். நான் முந்தாநாள் மாலை அந்த ஆட்டோவைப் பார்த்ததாத் தோணுது...''

''அப்படியா மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி? உங்களால எங்க ஆபீசுக்கு வர முடியுமா? உங்க ஆபீஸ்லேருந்து கிட்டக்கத்தான்...''

''எப்ப?''

''இப்ப!''

''இப்ப சூப்ரண்டு பர்மிஷன்...''

''அதெல்லாம் கவனிச்சுக்கலாம். விதான்

சௌதாவில எந்த ஆபீஸ் சொன்னீங்க...?''

''அக்ரிகல்சர் மினிஸ்ட்ரி... ராமா! மாட்டிண்டேண்டா!

''கோபாலப்பான்னு இருக்காரே, அவரைக் கூடத் தெரியும் — ஐ. ஏ. எஸ். ஆபிசர்...''

''அவர்தான் எங்க ஏ. எஸ்!''

''ரொம்ப நல்லது. உடனே வர்றோம். என்ன கிருஷ்ணமூர்த்தி...?இனிஷியல்சொல்லுங்க...''

''வி. கே...''

கிருஷ்ணமூர்த்தி. டெலிபோனை வைத்ததும் கரங்கள் நடுங்க ஆரம்பித்தன. ''லலிதா கேட்டா கொன்னுடுவா, ராமாச்சார். நல்லா மாட்டிக்கிட்டேன்!''

''சேச்சே, போலீஸ்ல நமக்குத் தெரிஞ்சவன் ஒரு பையன் — ஃபிங்கர் பிரிண்ட் செக்ஷன்ல இருக்கான். அவன்கிட்ட வேணா ஒரு வார்த்தை சொல்லிடறேன்!''

''இப்ப வந்து எங்கே அழைச்சுக்கிட்டுப் போவாங்க...?

''தெரியாதுப்பா! ஒரு மாதிரி அடையாளம்காட்ட அழைச்சுட்டுப்போவாங்களாயிருக்கும்?''

''இருட்டில நான் யாரையுமே பார்க்கலையே!''

''இருந்தாலும் காட்டச் சொல்வாங்க. அதானே கஷ்டம்!''

''அய்யோ! தெரியாத்தனமா மாட்டிக்கிட்டேனே...!''

''பயப்படாதே என் கசின் மஞ்சுநாதன்னு இருக்கான் — அவன்கிட்டச் சொன்னா அதிகம் தொந்தரவு பண்ண மாட்டாங்க!''

**அ**ரை மணியில் போலீஸ் ஜீப் வந்து, கிருஷ்ணமூர்த்தியை அழைத்துச் சென்றது. நேராகக் காப்பி போர்டு அருகில் இருந்த போலீஸ் ஆபீசின் பச்சைத் தட்டிகளையும் ரேடியோ டவர்களையும் கடந்து, பக்கத்தில் இருந்த கட்டடத்துக்கு ஒரு கான்ஸ்டபிள் அழைத்துப் போக, தர்மராஜனின் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். — கிருஷ்ணமூர்த்திக்கு பாத்ரூம் வந்துவிட்டது! ''ரொம்ப நேரமாகுமாப்பா?''

''கொத்தில்லா!''

''தர்மராஜன் அவரைப் புன்னகையுடன் வரவேற்று, ''வாங்க, என்ன சாப்பிடறீங்க? காப்பி, கூல்ட்ரிங்க்?'' என்று கேட்டார்.

''ஏதும் வேண்டாம். சொல்ல வந்ததைச் சொல்லிடறேன்.''

''அவசரப்படாதீங்க...''

அறை வாசலில் ஒருத்தன் கழுத்தில் சவுக்கம் போட்டு அழைத்து வரப்பட்டான். ''அப்புறம் பார்க்கலாம்யா!'' — என்றார் தர்மராஜன்.

''அய்யா, ரொம்ப அடிய்யா! 'மாலை' யாவது குடுத்துரச் சொல்லுங்க!'' என்று அவன் கெஞ்ச, கிருஷ்ணமூர்த்திக்கு வயிற்றைப் புரட்டியது.

''சொல்லுங்க இப்ப'' என்றார் தர்மராஜன்.

(தொடரும்)

## சென்னை 'சிப்ஸ்'

* சென்னை நகர போலீஸ் கமிஷனர் துரையின் அலுவலக அறை வாசலில் காணப்படும் ஓர் அறிவிப்பு: ''ஆணையாளரைச் சந்தித்து விண்ணப்பங்கள் தரும் மனுதாரர்கள், ஆணையர் காலில் விழுவதோ, அழுவதோ கூடாது! குறைகளைக் கூறியவுடன் அறையிலிருந்து வெளியேறி விட வேண்டும்!''



* அப்போலோ மருத்துவமனையின் ரத்தச் சேமிப்பு வங்கியில் ஒரு புதுமையான காரியத்தைச் செய்திருக்கிறார்கள். இங்கே உள்ள குளோஸ்டு சர்க்யூட் டெலிவிஷனில் ... அல்லது ஒலியும் ஒளியும் பார்த்த படியே, ரத்த தானம் செய்யலாம்.

* கவர்னர் மாளிகையின் வரவேற்பு அறையில் ஓமந்தூரார் முதல் எம்.ஜி.ஆர். வரை அத்தனை தமிழக முதல்வர்களின் புகைப்படங்களும் வரிசையாய் மாட்டப்பட்டுள்ளன. ஆனால் ஜானகி ராம்சந்திரன் படம் மாட்டப்படவில்லையே? என்ன காரணம்?

— ஜாலி





பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ .கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்**
**ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி**
**D—76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம்—612 001.**

**இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.**



# கதாநாயகர்கள்

**எஸ்**. வி. சேகர், பாண்டியராஜன் இருவருமே சேர்ந்து லூட்டி அடிப்பதால் கதாநாயகர்கள்' என்றே நாமகரணம் பண்ணலாம்.

'துபாய்க்குப்' போய் எஸ். வி. சேகரும், பாண்டியராஜனும் சம்பாதிப்பதுதான் கதை. மெல்லிய ஆனால் ஸ்ட்ராங்கான நூல்.

கள்ளத்தோணியில் துபாயில் இறக்கி விட்டுவிடுகிறேன் என்று பத்தாயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு எஸ். வி. சேகரையும், பாண்டியராஜனையும் ஒரு நாளிரவு முழுவதும் கடலில் பயணம் செய்து முடிந்ததும் கொச்சி கடற்கரையில் இறக்கி விட்டுவிட, கதை அங்கேதான் ஆரம்பிக்கிறது.

அதற்கு முன்னால் பாண்டியராஜனும் எஸ். வி. சேகரும் ஒரு கம்பெனியில் ப்யூனாக இருப்பதும் அப்புறம் எம். டி. யைப் படாதபாடு படுத்தியமைக்காக வேலை போவதும், அப்புறம் தில்லி எருமைகள் இரண்டு பாங்க் லோனில் வாங்குவதும் பால் கறந்து விற்பதும் — நன்றாக மனம் விட்டுச் சிரிக்க முடிகிறதென்றாலும் நீளமோ நீளம் என்பதால் வேஸ்டோ வேஸ்ட் என்று தோன்றுகிறது.

கதாநாயகி என்று ஒருவர் இல்லாவிட்டால் எடுபடாது என்று எண்ணினார்களோ, என்னவோ: ரேகா. 'பளிச்' என்று இருக்கிறார். பாண்டியராஜனைக் காதலிக்கிறார். ஒரு டுயட் பாடுகிறார். மற்றபடி அவருக்குப் படத்தில் வேலை இல்லை என்றாலும் அவர் தலைகாட்டுகிற நேரமெல்லாம் குளுகுளு என்றிருக்கிறது.

அகில இந்தியப் புகழ்பெற்ற கொலைகாரன் காய்கறி வண்டியில் டைம்பாம் வைப்பதும், டிரான்ஸிஸ்டரில் டைம்பாம் வைப்பதும் எதுவுமே எடுபடாமல் கடைசியில் நேருக்கு நேர் கதாநாயகர்களுடன் மோதி உயிரை விடுவதும் சிரிப்பைத் தாராளமாக வரவழைக்கின்றன.

மனோரமாவைப் போய் அப்படி வேஸ்ட் பண்ணி விட்டார்களே? நியாயமா?

அந்தக் கடைசிக்ளைமாக்ஸ். வெங்கடேஸ்வரா மில்லில் மலேசியாவாசுதேவன் 'சரக்கு' மாற்றத் தீர்மானிக்க, அதே வெங்கடேஸ்வரா மில்லில் எஸ். வி. சேகரையும் பாண்டியராஜனையும் ஒழித்துக் கட்டுவதற்காக வரவழைக்கப்பட, நீலச்சட்டைக்காரர்களும், சிவப்புச் சட்டைக்காரர்களும் மோதிக் கொள்ள, நகைச்சுவைக்கு நகைச்சுவை, விறுவிறுப்புக்கு விறுவிறுப்பு.

பாண்டியராஜன், "நான் பி. காம். ஃபர்ஸ்ட் க்ளாஸ், நீ வெறும் எஸ். எஸ். எல். சி." என்று இந்தப் படத்தில் ஆயிரம் முறையாவது பேசி இருப்பார் போலிருக்கிறது. சிரிப்புக்குப் பதில் வெறுப்பு.

காமிரா ஒன்றும் மெச்சிக் கொள்கிறபடி இல்லை.

சந்திரபோஸின் இசையும் அப்படியே. அந்தக் கடல் பாட்டு இன்னொரு படத்தில் வந்த 'ஓஹோ' பாட்டின் அமெச்சூர்த்தனமான நகல் முயற்சி. கொஞ்சம் கூட எடுபடவில்லை.

நகைச்சுவையையே பிரதானமாகக் கொண்டு படம் பண்ணியிருக்கிறார்கள். அதனால் படத்தின் மற்ற குறைகள் எல்லாம் அடிபட்டுப் போகின்றன.... ஹி.... ஹி....

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

